# மகான் சேஷாத்திரி சுவாமிகள்




ஏ டி எம் பன்னீர்செல்வம்

# மகான்
# ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் வாழ்க்கை வரலாறு

" முத்தமிழ்ப்பண்ணை "
வைரி செட்டிப்பாளையம்-621012.
திருச்சி மாவட்டம்.

சேஷசிரேஷ்ட கவிமணி
ஏடிஎம். பன்னீர்செல்வம்




ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமம்,
திருவண்ணாமலை- 606 603.

மகான்
ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள்
வரலாற்று நூல்



நான்காம் பதிப்பு
அக்டோபர் '90
இரண்டாயிரம்



சேஷசிரேஷ்ட கவிமணி
ஏடிஎம். பன்னீர்செல்வம்



ரூபாய் மூன்று



ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமம்
செங்கம் சாலை,
திருவண்ணாமலை-606 603.



ஆர். முத்துக்குமாரசாமி, பி.எஸ்ஸி., பி.எல்.,
செயலாளர்,
ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமம்,
17-A, கோபால் பிள்ளையார் கோயில் தெரு,
திருவண்ணாமலை-606 601.



அச்சிட்டோர் :
சாரதா அச்சகம்,
17/9, அசலியம்மன் கோயில் தெரு,
திருவண்ணாமலை-606 601.

## ஞானப் பதியன்கள்

மண்ணைக்காப்பதற்காக மகான் தன்னை வெளிப்படுத்தித் தரணியை அழைக்கிறார்! மகான் சன்னிதானம் நோக்கி நம்பிக்கையின் கால்கள் நடக்கின்றன! அகிலம் எங்கிருந்தும் தேவை என்னும் திருவோட்டுடன் தெய்வத்தின் புத்திரர்கள்! ஆம்! கலியுகத்தின் காப்பு மந்திரமாக "சேஷாத்திரி" திருப்பேர் உச்சரிக்கப்படுகிறது. வெகுவாகவும் கூட!

அண்ணாமலையார் பூமியைத் தலைநகராக்கி உலக பரிபாலனம் செய்கிறார் மகான்! தரிசனத்திற்கும் உணர்வுப் பூர்வமான அனுபவத்திற்கும் இந்நூல் தலைகுனிந்து வணங்கும்! ஏனென்றால் இந்த எழுத்துப்பேழை ஒரு தெய்வச் சாலையின் கைகாட்டி—அவ்வளவே! இதில் பயணிப்பதும் பயன் பெறுவதும் பக்குவத்தைப் பொருத்ததே!

மகான் அருள்திரு சேஷாத்திரி சுவாமிகளின் திருவருளே இந்நூலின் மூலம்! அந்தச் சூத்திரத்தின் செய்யுள் விளக்கமே இகபர சௌபாக்யவதி பிரம்மரிஷி சேஷநாத ரூபிணி ஞானத்தாய் உமாதேவி அம்மையார் அவர்களின் திருவாய் மொழி! எனவே இந்த நூலாபரணம் மகானின் பிற சரிதங்களையொத்த விரிந்த விருட்சமல்ல. சிறியது. எளியது, ஒடுங்கியது—சிறு விதையைப் போன்றே!

ஞானத்தந்தை ஆர். எம். அய்யா அவர்கள் இவ் வெளியீட்டிற்கும் ஞானத்தந்தைதான்! கோக்கப்பட்ட எழுத்தின் யாகத்தால் தியான மண்டபத்தில் நெஞ்சங்கள் சேர்வதாக!

வாழ்கின்ற "மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள்" காவியம் முயற்சியல்ல-கட்டளை! சிந்தனையல்ல-திருவருள்! தொகுப்பல்ல —தொண்டு! வாய்ப்பல்ல வேள்வி! பிறப்பல்ல-பிரவாகம் நிறைவு அதிகாரம் எழுத்துக்களல்ல— மகா மந்திரம்.

பல்லாயிரக்கணக்கான பக்தர்களின் நெஞ்சில் இந்த நூல்! மேலும் பல்லாயிரம் பாடவே இந்த நான்காம் பதிப்பு! இதில் புதியன புகுந்துள; பழமைக்கு அழிவிலை! அறிந்தவர்கள்; அனுபவித்தோர்; பலன் அடைந்தோர் என்ற எல்லை மீறி இந்த நூல்; அதுவே இதன் சிறப்புமானது. இதன் பிரதிகளும், ஆஸ்ரம வளர்ச்சியும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டதே.

ஜகமெலாம் பரவிவரும் சேஷாத்திரி சுவாமிகளை அறிந்து கொள்க. அதற்கு இந்நூல் வாய்ப்பாடு; அரிச்சுவடி; ஹரிநமோத்து சிந்தம் இந்தப் பிள்ளையார் சுழியோடு புறப்படுங்கள்! சேஷ பயணம் விசேஷ பயணமாகும்! இந்த சுவிசேஷம் கூட வரும்! ஆன்மீகத்தின் எல்லா சாலைகளுக்கும் சில வழிகாட்டி ஆனாலும் கூட வரும்.

எல்லாப் புகழையும் சேஷார்ப்பணம் செய்வதும் வழிபாடே: இனி படிக்கப் போகின்றவர்களுக்கெல்லாம் இது படையல். ஏனென்றால் இந்நூல் படிக்கக் கிடைத்த வாய்ப்பல்ல. வரப் பிரசாதம். பகிர்ந்து உணருங்கள், பலரோடு மிகப் பலரோடு; பலனோடும்தான்

ஓம் சத்குரு ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் திருவடிகளே சரணம்!

**ஏடிஎம். பன்னீர்செல்வம்**

உ

# மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள்

## 1. அழைக்கும் மலை :

வடார்க்காடு மாவட்டத்தின் பெயர் பெற்ற நகரம் திருவண்ணாமலை; பிற நாட்டவரையும் கவர்ந்திழுக்கும் புண்ணிய பூமியும் இதுவே. சென்னையிலிருந்து 186 கி. மீ. தொலைவிலும் விழுப்புரம்—காட்பாடி புகைவண்டித் தடத்தில் காட்பாடியிலிருந்து 93 கி. மீ. தொலைவிலும், விழுப்புரத்திலிருந்து 68 கி. மீ. தொலைவிலும் இந்நகர் அமைந்துள்ளது. கடல் மட்டத்திலிருந்து 167.44 மீ. உயரத்தில் அமைந்துள்ள இந்நகருக்கு முக்திபுரி, தலேச்சுரம், சிவலோகம், சுத்த நகரம். கௌரி நகரம், சோணாசலம், சோணகிரி, சோணாத்ரி, அண்ணா நாடு, அருணாசலம், அருணகிரி, அருணாத்திரி, அனற்கிரி, திருவருணை எனவும் பெயர்கள் உண்டு. 217 அடி உயரக் கோபுரமும், 2668 அடி உயர மலையும் அணி செய்யும் இந்நகரின் முக்கிய திருவிழாக்கள், அருணகிரி நாதர் திருவிழாவும், கார்த்திகை தீபத் திருவிழாவும் ஆகும். எல்லா நாட்களும் திருவிழா காணும் கோயிலும் இதுதான்.

அருள்மிகு அண்ணாமலையார் திருக்கோயிலானது அகிலப் புகழ்பெற்றது. திருவண்ணாமலையின் சிறப்பினைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால்,

**" பிறக்க முக்தி திருவாரூர்<br>தரிசிக்க முக்தி சிதம்பரம்<br>இறக்க முக்தி காசி<br>நினைக்க முக்தி திருவண்ணாமலை "**

என்ற வரிகளையே மேற்கோளாக்கலாம். கிருதயுகத்தில் நெருப்பு மலையாகவும் திரேதாயுகத்தில் மாணிக்க மலையாகவும்

துவாபர யுகத்தில் பொன் மலையாகவும் கலியுகத்தில் கல் மலை-யாகவும் இருப்பது இம்மலையின் சிறப்பாகும். வரலாறும் ஆகும்.

இத்தகைய சமயச் சிறப்புள்ள திருவண்ணாமலை திருநகரில் ஞானியர் பலரும் தோன்றினர். நூற்றாண்டுகள் தோன்றும் சித்தர்கள் பலரும் உலவினர். எங்கோ பிறந்தும் உண்ணாமுலை உடனாகிய அண்ணாமலையால் ஆட்கொள்ளப் பட்ட ஞானத்தபோதனரை வாவென்று அழைக்கும் மலையாம். இம்மலைச்சாரலிடைவந்து மகான்களாய் வாழ்ந்து முக்தி யடைந்தோரும் உண்டு. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்த வரிசையில் தன்னை வெளிக்காட்டி மறைத்துக்கொண்டவர் நம்மை இன்றும் வழிநடத்தும் மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆவார். வழிகாட்டும் அம்மகானின் வாழ்க்கை வரலாறும் நித்திய வழிகாட்டி ஆகும்.

## 2. காமகோடித் தோட்டம் :

தொண்டை மண்டலம் எனச் சிறப்பிக்கப்படும் பகுதியின் தலைநகரம் தலைசிறந்த நகரம் காஞ்சிபுரம். நகரங்களில் சிறந்ததும் காஞ்சிபுரம்! அங்கு சில காலம் தங்கினார் ஆதிகுருவாகிய ஸ்ரீசங்கரர். அப்போது ஸ்ரீவித்தையை உலக நன்மைக்காக அவர் நிலைநாட்டி வந்தார். அதைத் தொடர்ந்து நடத்தி வருவதற்கு காஞ்சியில் தகுந்தோர் இல்லாமையை உணர்ந்தார். எனவே, ஸ்ரீசங்கரர் நர்மதை நதிக்கரையோரம் வாழ்ந்த முப்பது தேவி பக்தர்களை குடும்பத்தோடு காஞ்சீபுரம் அழைத்து வந்தார். அவர்கள் பரம்பரை பரம்பரையாக ஸ்ரீவித்தையை காஞ்சியில் இருந்து உலகில் பரப்பினர். அவர்களே 'காமகோடி வம்சம்' என்றழைக்கப்பட்டனர்.

பன்னிரெண்டாம் நூற்றாண்டில் கலியின் கொடுமையால் இவ்வம்சம் வெகுவாகக் குறைந்தது. பதினைந்தாம் நூற்றாண்டில் காமகோடி வம்சத்தவர் சோதிடக் கலையில் சிறந்து விளங்கினர். காமகோடி வம்சத்தில் உதித்த ஒவ்வொருவரும் மகரிஷிகளுக்கே ஒப்பானவர். இப்பரம்பரையில் 1790ஆம் ஆண்டில் தோன்றியவர்தான் காமகோடி சாஸ்திரிகள். இவர் வேதசாத்திரங்கள் தேர்ந்தவர். கீர்த்தனைகள் யாத்தவர், சீடர்கள் மிக்கவர்.

## 3. உதிரப்பல்லக்கு :

காமகோடி சாஸ்திரிகள் தம்பி சிதம்பர சாஸ்திரி ஆவார். காமகோடி சாஸ்திரிக்கு சேஷம்மாள் என்றொரு மகள் உண்டு என்றாலும், தன் தம்பியின் மக்களில் ஒருவரான தேவாம்சம் பொருந்திய மரகதம்மாள் என்பவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அழகிற்கும் அறிவிற்கும் ஒழுக்கத்திற்கும் அவள் முகவரியானவள். தேவியின் அம்சமான மரகதம் பாடுங்குரல் பெற்றவள். பன்னிரெண்டாம் வயதிற்குள் 'சாகித்ய சங்கீத கலாவதி' பட்டம் பெற்றாள். தம் மகளாய் பாவித்து வளர்த்த காமகோடி சாஸ்திரியார் தக்க வரனைத் தேடினார்.

அழகிலும் கல்வியிலும் மிகச் சிறந்த காமகோடி வம்சத்தைச் சேர்ந்த வரதராஜர் என்பாரை மகள் மரகதத்திற்கு ஏற்ற மணமகனாகத் தேர்ந்தெடுத்தார். அவ்வரதராஜர் காமகோடி சாஸ்திரிகளின் மாணவருங்கூட. திருமணம் சிறப்பாக நடந்தேறியது. மரகதம்மாள்—வரதராஜர் மனமொத்த தம்பதிகளாயினர். இறைவழிபாட்டுடன் இல்லறம் இனிதே நடந்தது. மரகதம்மாள் தூங்கியே வரதராஜர் பார்த்ததில்லை என்றாலும், புத்திர பாக்கியம் இல்லையே எனுங் குறை இருவரையும் கலக்கியது.

தம்பதியர் தவிப்பைக் கண்ணுற்றார் காமகோடி சாஸ்திரிகள். காமாட்சி தேவியிடம் முறையிட்டார். வேண்டுதல் கேட்டு காமாட்சி தேவியும் கனவில் தோன்றி, "நவநீதம் கொடு ஞானக்கலை உதிக்கும்" என்று கூறி மறைந்தாள். காலையில் காமகோடி சாஸ்திரியார் தேவியை துதித்து பசு வெண்ணையை மரகதம்மாள்—வரதராஜர் உண்ணக் கொடுத்தார். மரகதம், தேவியின் அருளால் கர்ப்பம் தரித்தார்; அன்னையானார்.

## 4. ஒளியின் வருகை :

மரகத அன்னையின் மணி வயிற்றில் இந்த மண்ணிற்காக 1870-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 22-ஆம் நாள் — கலியுகாதி 4970. சுக்கல ஆண்டு தைத் திங்கள் 11–ஆம் நாள் சனிக்கிழமை ஹஸ்த நட்சத்திரத்தில் 'தேவ வெளிச்சம்' தோன்றியது. காமகோடி சாஸ்திரியாருக்குச் சொந்தமான சோலைகளும்

நிலபுலன்களும் சூழ்ந்த வழூர் என்ற கிராமத்தில்தான் மகானின் திருஅவதாரம் நடந்தேறியது. வந்தவாசி வட்டத்தில் மருதநாடு வழியாக உத்திரமேரூர் செல்லும் வழியில் அமைந்த கிராமமே வழூர் அக்ராகரம். இன்று இது மருவி வாவூர் அகரம் என வழங்கப் படுகிறது. வாவூர் எனவும் அழைக்கப்படுகிறது.

அழகான படித்துறைக்கொண்ட அற்புதமான குளம், அருகில் திருக்கோயில், நாற்புறத் துறையில் ஓர்த்துறைக்கு காமகோடித்துறை என்று பெயர். அருகில் அக்ராகரம் இருந்து மறைந்துவிட்டது. இன்று மாட்டுத் தொழுவங்களரல் சூழ்ந்-துள்ளது. சாய்ந்துவிட்ட நிலையில் துளசி மாடமும், தொடவும் வணங்கவும் தூய உணர்வை ஏற்படுத்துகிறது. பூமியில் பதிந்தும் பதியாமலும் இலிங்கம். இன்றைய நிலையிது. அன்று நம் சத்குரு இந்த தபோவனத்திலேதான் பிறந்தார்; தவழ்ந்தார்.

நம் சுவாமிகள் பிறந்தபோது நாள்கோள் அனைத்தும் சிறப்பாக அமைந்திருந்தது. பிறந்த தினம் அருள்தரு சீனிவாசப் பெருமாளுக்கு உகந்த சனிக்கிழமை என்பதாலும், முன்னோர்கள் கொண்ட பெயர் நினைவாகவும் 'சேஷாத்திரி' எனத் திருப்பேர் சூட்டித் தொட்டிலிட்டுத் தாலாட்டி மகிழ்ந்தனர். காமகோடி சாஸ்திரிகள் மரகதம் அனைவரும் காஞ்சிபுரம் வந்துவிட, அங்கு வளர்ந்தார் சேஷாத்திரி.

## 5. உதய வெளிச்சம் :

தெய்வ தரிசனத்துக்காக குழந்தையைத் தூக்கிக்கொண்டு திருக்கோயில் செல்வது மரகதம்மாளின் தினசரி வழக்கம். கோயிலுக்குச் செல்லும் வழியில் ஓரிடத்தில் ஒரு வியாபாரி வெண்கலத்தினால் வார்க்கப்பட்ட நவநீத கிருஷ்ணர் பொம்மைகளைக் குவித்து விற்பனை செய்யத் தொடங்கினான். நான்கு வயது சேஷாத்திரி, சிலைகளைப் பார்த்தார், இறங்கினார், இரண்டு மூன்று சிலைகளைக் கையிலெடுத்துக் கொண்டார். "அம்மா! கிருஷ்ண பூஜை செய்யப்போகிறேன்' என்றார். ஒன்றை மட்டும் வைத்துக்கொண்டார். சேஷாத்திரியின் மழலையைக் கேட்டான் வியாபாரி. முகப்பொலிவைக் கண்டான். மகிழ்ந்தான். மரகதம்மாளை நோக்கினான். "அம்மா! கிருஷ்ண

ரூபத்தில் உள்ள குழந்தை பூஜைக்குச் சாமி கேட்கிறது. காலை வியாபாரம், இன்னும் வியாபாரம் தொடங்கலே, பரவாயில்லை காசு வேண்டாம், குழந்தை கைபட்டது போதும். சிலை எடுத்துக்குங்க'' என்றான்.

இறைவனைத் தொழுது வீட்டிற்குத் திரும்பினர் தாயும் மகனும். அந்த நாள் கழிந்தது. மறுநாள் வந்தது. அன்றும் வழக்கம்போலவே மரகதம்மாளும் சேஷாத்திரியும் கோயிலுக்குச் சென்றனர். வழியில் அந்த பொம்மைக் கடை. இவர்களைக் கண்டதும் திடீரென்று வியாபாரி அன்னையின் காலில் விழுந்து வணங்கினான். எழுந்து சேஷாத்திரியின் கைகளை எடுத்து கண்ணில் ஒற்றிக்கொண்டு "தங்கக் கை, தங்கக் கை'' என்று உணர்ச்சி வயப்பட்ட குரலில் சொன்னான்.

மரகதம்மாளும் உடன் வந்த பெண்டிரும் ஒன்றும் புரியாமல் திகைத்தனர். வியாபாரி சொன்னான்: "எந்தத் திருநாளிலும் நூறு சிலைகூட விற்காது. இந்தத் தெய்வக் குழந்தை கைவைத்த அதிர்ஷ்டம் ஆயிரம் சிலைகளும் விற்று விட்டது. என்னே என் தங்கக்கை பெருமை!'' என்று மகிழ்ச்சியால் ஆடினான். இச்சேதி தெருவெங்கும் பரவியது. நாளாவட்டத்தில் ஊரிலுள்ளோர் 'தங்கக் கை' சேஷாத்திரி என அழைக்கத் தொடங்கினர். விளையும் பயிருக்கு முளையிலே சிறப்பு வந்தது. நான்கு வயதில் நானிலம் அறிந்தது.

## 6. பிஞ்சு காவியம் :

தன் மகன் சேஷாத்திரிக்கு அய்ந்து வயது தொடங்கிய உடன் கல்வி புகட்டத் தொடங்கினார் வரதராஜ சோதிடர். தாய்வழித் தாத்தா காமகோடியார் சேஷாத்திரி நாவில் மந்திரம் எழுதி அட்சரம் பழக்கினார். வடமொழியிலும் தமிழிலுமாகக் காவியங்கள் தேர்ந்தார். மிகச் சிறு வயதிலே ஆய்வு நோக்கிலே அனைத்தையும் அணுகத் தொடங்கினார். இனிமையான குரலில் எடுப்பாகப் பாடவுந் தொடங்கினார். சேஷாத்திரியின் ஏழாம் வயதில் உபநயனம் நடந்தது. வேதாத்யானம் செய்ததுடன் பற்பல சாத்திரங்களும் பயின்றார்.

அன்றாடம் தன் தாய் தந்தையைத் தவறாமல் வணங்கி நாளை தொடங்குவார் சேஷாத்திரி. அப்போது நரசிம்மன் என்றொரு சகோதரன் பிறந்தான். அவனை தந்தை வரதராஜர் எண்ணப்படி அவருடைய தம்பி இராமசாமிக்கு தத்து மகனாக ஈந்தார். பால சேஷாத்திரி பதினான்காம் வயதைத் தொட்டார். அப்போதுதான் முதல் சோகம் சேஷாத்திரி வீட்டில் சம்பவித்தது. எல்லாம் அறியும் வல்லமை படைத்த வரதராஜ சோதிடர் தான் இறக்கப் போவதையும் அறிந்திருந்தார். அனைவருக்கும் அதனைச் சொன்னார். அதன்படியே மறைந்தார். அழுதார் சேஷாத்திரி; மூர்ச்சையானார் மரகதம்மாள்.

கணவனைப் பிரிந்த மரகதம்மாளுக்கும் தந்தையைப் பிரிந்த சேஷாத்திரிக்கும் ஆதரவானார்காமகோடி சாஸ்திரியார். அவருக்கு இப்போது வயது எண்பதுகளில் இயங்கியது. அப்போது வந்தவாசியில், புகழ்பெற்ற சர். சி. பி. ராமசாமியின் தாய்வழி தாத்தா வட்டாட்சியாளராகத் தொழில் புரிந்தார். அவர் இராமாயணம் பாகவதச் சொற்பொழிவுக்குக் காமகோடி சாஸ்திரிகளை வரக் கேட்டார். உடல் நலக் குறைவால் தாம் போகாமல் பால சேஷாத்திரியை வந்தவாசி அனுப்பினார். துணைக்குத் தாய் மரகதம்மாளும் போனார். அங்கு ஓராண்டு காலம் இராமாயண பாகவத சொற்பொழிவாற்றினார்.

இந்நிலையில் காமகோடி சாஸ்திரிகள் முதுமையில் தளர்ந்தார். காஞ்சிபுரம் உபநிடத பிரம்ம மடத்து சாமியிடம் சந்நியாசம் பெற்றார். யோகப் படிப்பில் 'பிரம்மானந்த சரஸ்வதி' பட்டம் பெற்றார். சில மாதங்களில் இவர் இயற்கை எய்தினார், காமகோடி சாஸ்திரிகளுக்கு வழூர் கிராமப் பெரும் பகுதி நிலங்கள் சொந்தமாயிருந்ததை வட்டாட்சி அலுவலக 'அ' பதிவேடுகள் சான்று செய்கின்றன. இப்போது அங்கு சாஸ்திரிகள் எவருமிலர்.

## 7. அம்மா அழைப்பு :

காமகோடி சாஸ்திரி மறைவுக்குப் பின் சேஷாத்திரியின் சித்தப்பா இராமசாமியும் சித்தி கல்யாணியும் மரகதம்மாளுக்கும் சேஷாத்திரிக்கும் அடைக்கலம் தந்தனர். சேஷாத்திரிக்கு வயது பதினேழானது. வாலிபத்தின் வாயிலிலே நிற்கும் தன் மகனுக்கு

மணமுடிக்க எண்ணினார் மரகதம். தாமல் கிராமத்தில் சேஷாத்திரி அத்தை மகள் காகினிதேவி இருப்பது நினைவுக்கு வந்தது அவளை மருமகளாக்க எண்ணினார். அத்தை வெங்கலட்சுமியும் அவ்வாறே எண்ணினாள். சித்தப்பா இராமசாமி சோதிடர், மகனின் சோதிடத்தை ஆய்ந்தார்.

"சேஷாத்திரிக்கு சன்னியாசி யோகம்தான் உள்ளது: சன்னியாசியாகி பின் யோகியாவான். திருமணம் நடக்காது" எனக் கூறினார். மரத்தடியில் அமர்ந்திருந்த மரகதம்மாள் ஆசையில் இடி விழுந்தது; அழுதாள்; புரண்டாள்; அரற்றினாள். நாட்கள் நகர்ந்தன. இடையில் காகினிதேவிக்கும் திருமணம் நடந்தது. மரகதத்தின் தம்பியும் மரித்தார். எல்லாம் சேர்ந்து நோயாக உருவெடுத்தது. ஒரு கார்த்திகை மாதம் சுக்கிலபட்சம் தசமியில் சேஷாத்திரியை அழைத்தார்.

இது நடக்க சில தினங்களுக்குமுன் சேஷாத்திரி தியானத்தில் அமர்ந்திருந்தார். அப்போது 'சில்'லென முதுகில் ஏதோ ஊர்வது போன்ற உணர்வு. மெல்ல அவ்வுணர்வு மேலேறிக் கழுத்தைச் சுற்றியது. கண்ணைத் திறந்து பார்த்தார். சுற்றியது பாம்பென தெரிந்துகொண்டார். பச்சை நிறப்பாம்பு. மீண்டும் கண்களை மூடினார்; பச்சை நிறத்தில் பற்றியது பராசக்தி என அறிந்தார். "உலகத்தின் தாய் நம்மைப் பற்றிக் கொண்டாள். உதிரத்தின் தாய் நம்மை விட்டுவிடப் போகிறாள்" எனப் பொருள் உணர்ந்துகொண்டார்.

அழைத்த தாய் முன் அமைதியாக நின்றார் சேஷாத்திரி. எழுந்து உட்கார்ந்தார் மரகதம். மெல்லிய மிக மெல்லிய ஈனசுரத்தில்

**ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்**
**நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்**
**நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்**
**நிஸ்சலதத்வம் ஜீவன்முத்தி:**

**தர்சனாத் அப்ரஸதஸி**
**ஜனனாத் கமலாலயே**
**காச்யாங்கி மரணான்முக்த்தி**
**ஸ்மரணாத் அருணாசலே:**

என்ற இரு சுலோகங்களையும் மகனின் மார்பில் அடித்து அடித்து மூன்று முறை சொன்னார். காமகோடி சாஸ்திரியார் எழுதிய 'அம்பசிவே' என்ற கீர்த்தனையை மகனைப் பாடச் சொல்லி தானும்கூடப் பாடினார். இறுதியில் "அருணாசல அருணாசல அருணாசல" என மூன்று முறை உரக்கக் கூவி சேஷாத்திரி மடிமேல் தலைசாய்த்து இயற்கை எய்தினாள். மயங்கி வீழ்ந்து மயக்கம் தெளிந்தபின் குமுறினார் சேஷாத்திரி. தம்பியுடன் சேர்ந்து இறுதிக்கடன் முடித்தார் பால சேஷாத்திரி.

## 8. துறவுச் சாலை :

தந்தை, தாய் மறைவுக்குப்பின் உலகப் பற்றிலிருந்து மெதுவாகத் தம்மை அவிழ்த்துக்கொண்டார் சாமிகள். சித்தப்பாவும் சித்தியும் காட்டிய ஆதரவும் அன்பும் அவரிடம் பலிக்கவில்லை. தாயின் அந்திமச் சொற்கள் ஆழமாகப் பதிந்தன. 'அருணாசல' மென்ற சொல் அடிமனத்தில் ஆணிவேர் ஆயின. திருவண்ணாமலையை மனத்தால் கண்டு அய்ந்து சிகரங்களுடன் ஓர் அட்டையில் மலையை வரைந்தார். மிக்க வியப்பு—என்னவென்றால், அது மிகச் சரியாக அமைந்தது தான்! பின்னாளில் இது தெரியவந்தது.

பூஜை அறையில் அப்படத்துடன் காமாட்சி, ராமர் படங்களை வைத்துப் பூஜித்தார். அதிகாலை முதல் பிற்பகல் வரை அறையை உள்தாளிட்டு பூஜையில் ஈடுபடுவார்! வேளைக்குச் சாப்பிடுவதில்லை. சில நாள் முழு பட்டினி. தாய்வழி தாத்தா உபதேசித்த 'ஜோட்ச்' மகாமந்திரத்தை உணர்ச்சியுடன் ஜெபம் செய்வார். "உடம்பு கெட்டுவிடும்" என்ற உறவின் உபதேசத்தைக் கேளார். தாயின் உபதேசமான 'அருணாசல' பக்தி விதையை ஓங்கி முழங்குவார். தியானத்திற்கு வீட்டில் இடையூறு எழுந்ததால் கோயிலுக்குப் போனார் சேஷாத்திரி சாமிகள்.

சக்கரத்தாழ்வார் சன்னதியும், காமாட்சி சன்னதியும் தியானக் கூடங்களாயின. அடிக்கடி குளிப்பார். 'மூக பஞ்சக துதியை' விடாமல் சொல்வார். அவ்வப்போது சேஷாத்திரி சாமி சூரியனை வணங்குவார். எப்போதும் ஏதேனும் முனகிக் கொண்டிருப்பார். எந்த வீட்டிலும் உட்காருவார்; எண்ணெய் தேய்ப்பதில்லை; முகச்சவரம் செய்வதில்லை; பெருமாள் திருவீதி

உலாவின்போது வழியில் இருக்கும் கல்லை முள்ளை பொறுக்கித் தூர எறிவார். உண்ணக் கொடுக்கும் உணவை காக்கை நாய்களுக்குப் போடுவார். கர்மா தொலையவேண்டும் என்பார்; அதற்காக ஜெபம் செய்கிறேன் என்பார்.

ஞானப்பயித்தியம் எனப் பலரும் எள்ளி நகையாடினர். ஆனாலும் நம் சேஷாத்திரி மயான ஜெபம் மேற்கொண்டார். மயானத்தில் ஜெபம் செய்தால் ருத்திரன் சீக்கிரம் அனுக்கிரகம் செய்வார் என்பார். மயானத்தில் ஜெபம் செய்வது சரியே என்று மூன்று மணி நேரம் ஒரு பெரிய வித்வானிடம் விவாதித்தார். வடமொழி சாத்திர மேற்கோள்களைச் சுட்டிக்காட்டி வெற்றியும் பெற்றார். மயானத்திற்குப் போக வேண்டாம்; போனால் வீட்டிற்குள் வரவேண்டாம்; என சித்தப்பா சொல்லவே சரியென்று வீட்டிற்குள் வருவதை நிறுத்திவிட்டார்.

சேஷாத்திரி சுவாமிகளின் தந்தை நினைவு நாள் வந்தது. சடங்குகள் நிகழ்த்த இராமசாமியும் கல்யாணியும் சாமியைப்போய் அழைத்தனர். நானோ சன்னியாசி. எனக்கு எதற்கு இச்சடங்கெல்லாம் என மறுத்தார். விடவில்லை சித்தப்பாவும் சித்தியும். அப்படியே அவரை வீட்டிற்குத் தூக்கிப்போய் ஓர் அறைக்குள் அடைத்து நினைவு நாட் சடங்குகளைச் செய்தனர். செய்து முடித்ததும் நம் சேஷாத்திரி இருந்த அறைக்கதவைத் திறந்தனர். என்ன வியப்பு. அறைக்குள் சாமியைக் காணோம். முதன்முறையாக இராமசாமியும் கல்யாணியும் தம் சேஷாத்திரி பெரிய மகான் என்பதை உணர்ந்தனர். பலமுறை சேஷாத்திரி, தனக்கு எண்ணெய் தேய்க்கும்போது வானத்தைப் பார்த்து தேவதைகள் போகிறார்கள், போகிறார்கள் எனச்சொன்னபோது ஏளனம் செய்தவர்தான் சித்தப்பா இராமசாமி.

உபாசனையும் வைராக்கியமும் மிகுந்த நிலை, அரித்துவார் தொடங்கி இராமேசுவரம் வரை பயணம் மேற்கொண்ட ஸ்ரீ பாலாஜி சுவாமிகள் காமாட்சி தரிசனத்துக்காக காஞ்சிபுரம் வந்தார். கண்டார் சேஷாத்திரியை; சன்னியாசம் தந்து சீடராக்கினார். அப்போது நம் சேஷாத்திரிக்கு வயது பத்தொன்பது.

அந்த வயதிலேயே எல்லாம் துண்டித்து துறவியானார். காஞ்சிபுரத்தை விட்டுப் புறப்பட்டார். வமூர், வந்தவாசி, வேலூர், திருப்பத்தூர், சவ்வாது மலை, கணியம்பாடி, படை வீடு,

ஆத்துவாம்பாடி, துரிஞ்சிக்குப்பம் ஆகிய ஊர்களின் வழியாகப் பயணம் மேற்கொண்டார். ஞான விதையைத் தனக்குள் பரப்பிய நாளும் தன்னை அழைத்து, ஞானத் தபோதனரை வாவென்று அழைக்கும் திருவண்ணாமலை நோக்கி வந்தார்.

## 9. வருகைக் குறிப்பு :

ஆனந்தத்தோடும், களிப்போடும் அன்னை சொன்ன அருணாசலம் நோக்கி விரைந்தார் நம் சாமி. திருவண்ணா-மலைக்கு வடக்கில் இருந்துதான் உள்ளே நுழைந்தார். இதுவரைப் பாராமல் வரைந்த பஞ்சமுகத்தை வழிபட்டவர்தான் சேஷாத்திரி. இப்போது அதை நேரில் பார்த்துப் பிரமித்தார்.

தை மாதத்து ரத சப்தமி திருநாள் அன்றுதான் திருவண்ணாமலையில் திருப்பாதம் பதித்தார். வந்த உடனே கிரிப்பிரதட்சணம் போனார். அண்ணாமலைக் காதல் மேலிட்டது. அடிக்கடி அங்கங்கே உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்தார்.

திருவண்ணாமலைக்கு வந்த உடனேயே அவர் பார்த்த முதல் நபர் கோயில் குருக்கள். ஆனால் அவர் கண்டு கொள்ளவில்லை. துர்க்கையம்மன் கோயிலுக்குப் போனார். பரவசப்பட்டார். பிற்காலத்தில் சித்துக்கள் விளையாடிய சிவகங்கைக் குளத்தைப் பார்த்தார்.

திடீரென இமயமலைக்குப் போகலாமா என்ற எண்ணம். ஏன் வந்தது தெரியவில்லை. ஆனால் மனத்தின் குரல், "இங்கேயே இரு, இரு" என்றது. "முக்தி இங்குதான்" என்றது. அப்படிப் போனால் இன்னொரு பிறவி வந்து இருக்கும். அடுத்தப் பிறவியில் மீண்டும் திருவண்ணாமலையில் முக்தி பெற்றுதான் ஆகவேண்டும் என அறிந்திருந்தார்.

காலம் பூராவும் இங்கேயே இருக்கவேண்டும் என்ற வைராக்யம் அவருள். நிறைய ஸ்தலங்களைப் பார்க்க நினைத்தார். ஆனால் திருவண்ணாமலை வேகத்தில் சில ஊர்களை மட்டுமே பார்த்துவிட்டு வந்துவிட்டார். காஞ்சிபுரத்-திலிருந்து புறப்பட்ட அவர் வடாற்காடு மாவட்டத்தில் சின்னச்

சின்ன கோயில்களையும் தரிசித்தார். வரும் வழியில் பெரும்பாலான கோயில் தரிசனம் நிகழ்த்தினார்.

திருவண்ணாமலை வரும் வழியில் அபூர்வ தரிசனம் கண்டார். அய்ந்து லிங்கம் அய்ந்து புற்று தரிசனம் அது. படவேட்டிற்கும் திருவண்ணாமலைக்கும் இடையில் முல்லைக் கொடி புதர் அது. இப்போது செடிகொடி மண்டி விட்டது.

இதில் சிறப்பு உண்டு. படவேட்டில் திருப்பணி செய்யும்போது ஆதிசங்கரர் அனுக்கிரகத்தால் உண்டாக்கப்பட்ட லிங்கம் அது. இப்போது தண்ணீரில் இருந்து வெளிப்பட்டு எடுத்து வைத்திருக்கிறார்கள்.

சின்ன வயதிலேயே கணங்கள் தரிசனம் கண்டவர் நம் சாமி. விஷ்ணு தரிசனம் நான்கு அய்ந்து வயதிலேயே முடிந்தது. வீட்டில் பூட்டி வைத்தபோது திறந்துவிட்டதே தேவிதான்.

ஆனால் பரம்பொருள் தரிசனம் திருவண்ணாமலை வந்த பிறகுதான் நடந்தது. கோயிலின் பல இடங்களில் நம் சாமி தவம் செய்தார். கம்பத்திளையனார், பாதாள இலிங்கம், அருணாசல யோகீஸ்வரர் மண்டபம் ஆகிய இடங்கள் குறிப்பிடத்தக்கன. திரெளபதையம்மன்கோயில், ஈசான்யம் ஆகிய இடங்களிலும் தியானம் புரிந்தார்.

யோகத்தாலும். கர்மாவாலும் உஷ்ணத் தொந்தரவு ஏற்பட்டது நம் சாமிக்கு. அதனால் இரவில் முழுக்கத் தண்ணீரில் ஹடயோகம் செய்தார். தண்ணீரை அள்ளி அள்ளிக் குடித்ததும் உண்டு.

அவருக்கு தவம் செய்யப் பிடித்த இடம் திருவண்ணாமலை துர்க்கையம்மன் கோயில். சுற்றுப் பிரகாரத்தில் ஒரு இடத்தில் தவம் செய்ய விரும்பினார்; செய்தார். சேஷாத்திரி சாமி எப்போதும் மலைமேல் உட்கார்ந்து தவம் செய்தது இல்லை, மலையொட்டிய இடத்தில் கொஞ்ச தூரத்தில் அதைச் செய்தார்.

திருவண்ணாமலை மலையைச் சுற்றிக் காடு அடர்ந்-திருந்தது. சேஷாத்திரி சாமி அந்தக் காட்டில் விதவிதமான பாம்புகளையும், விதவிதமான வண்ண வண்ணப்பறவைகளையும்

பார்த்தார். சலசலக்கும் ஓடைகளை, அருவிகளைக் கண்டார். மலை சுற்றவே பயமாக இருக்கும் சூழல் இருந்தது; அவர் வந்தபோது.

திருவண்ணாமலை வந்து அவர் நடத்திய சித்துக்கள் ஏராளம், ஏராளம்; தாராளம், தாராளம். திருவண்ணாமலைக்கு வருமுன்னே அவர் சித்து விளையாடும் ஆற்றல் பெற்றிருந்தார். ஆனால் வந்தவுடன் அதைச் செய்யவில்லை. பின்னர் அதைத் தொடங்கினார். தினசரி சித்துக்கள்தான்.

## 10. தேக முத்திரை :

அடிக்கடி சிரிப்பார்; சில சமயம் அரைமணியும் தொடர்ந்து சிரித்துக்கொண்டே இருப்பார்; வேகமாகச் சிரிப்பார்; வேகமாக நடப்பார்; முன்னும் பின்னும் நடப்பார்; வானத்தைப் பார்ப்பார்; மழையில் நனைவார்; வெய்யிலில் அலைவார்; ஓடுகின்ற வண்டிகளில் ஏறுவார்; சில மணித்துளிகளில் குதித்தும் விடுவார்; குப்பை வண்டியில் ஏறி இதுதான் கோச்சு வண்டி என்பார்; திருமண ஊர்வலம் சென்றால் கையெடுத்து வாழ்த்துவார்; பிண வண்டிகளைக் கண்டாலும் வணங்குவார். கடைகளில் நுழைவார்; பொருட்களை அங்கும் இங்கும் போடுவார்; கல்லா பெட்டியிலிருந்து காசுகளை எடுத்தெறிவார்; சாமியின் மகிமை அனைவர்க்கும் தெரிந்ததால் எவரும் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

வசீகரக் கண்கள், புறக்கழுத்தில் புரளும் பம்பைச் சடை. நீண்ட புயங்கள், அகண்ட மார்பு, நரம்பற்ற கணுக்கால், சிவந்த பாதங்கள், தங்க நிற மேனி. இவற்றின் சொந்தக்காரரே நம் சாமிகள். இடுப்பில் சுற்றிக்கொண்ட துணி, கால் நகத்தை மறைக்கும். மேலே மூடிய மேலாடை முதுகையும், மார்பையும் மறைக்கும். சேறு, சகதி, குப்பைக்கூளம் எனப் பிரித்துப் பார்க்காமல் எல்லா இடங்களிலும் உட்காருவார். அழுக்கே இவர் உடையின் நிறம், உணவு கொடுத்தால் விரல்களால் அதைக் கிளறிவிட்டுத் தன் துணியிலேயே துடைத்துக்கொள்வார். எவரேனும் புதிய ஆடை அணிவித்து மகிழ்வர். அதைச் சிறிது

நேரத்தில் பிச்சைக்காரர்களுக்குத் தானம் கொடுத்துவிட்டு அவர்களின் கந்தையைத் தன் சீருடையாக்கிக் கொள்வார்.

நிலையான இருப்பிடம் கிடையாது. காலில் விழுந்து வணங்குபவர்களுக்கு வசதியாக கால்களைச் சேர்த்து இடம் கொடுப்பார். தீயவர்கள் நெருங்கினால் வசைமாரி பொழிவார். கன்னியரை அணைப்பார்; கழுதையையும் அணைப்பார்; எந்தப் பெண்களைக் கண்டாலும் 'என் தாய்' என்று சொல்லி வணங்குவார். நம் சாமிகள் இனிமையான குரலுக்குச் சொந்தக்காரர்; பாட வேண்டினால் சில வரிகள் மட்டுமே பாடி நிறுத்துவார்; ஏதாவது கட்டையில் மிருதங்க ஜதி வரிசைகளை வாசிப்பார்; சுரமுனகலும் உண்டு.

நம் சேஷாத்திரி சாமிகள் தூங்கவே மாட்டார். ஊரெல்லாம் உறங்கும் வேளையிலும் அவர் சுற்றிக் கொண்டிருப்பார். அல்லது தியானத்தில் இருப்பார். உண்ண தரும் உணவை வாரி வாரி இறைத்து, "இதோ தேவதைகள் கேட்கின்றனர். இதை பூதங்கள் கேட்கின்றன" என்பார். தூக்கமின்றி அலையும் சாமி, எவராவது தூங்கக் கண்டால், "தூங்காதே, தூங்கினால் எமன் பிடித்துப் போவான்!" என்பார். "ஞானியாகவே விழித்திரு" என்பது அதன் பொருள். சாமிக்கு எவரிடத்தும் தனி நேசமும் இல்லை. வெறுப்பும் இல்லை. பசியும் இல்லை. தாகமும் இல்லை. தெரிந்தவரும் இல்லை. தெரியாதவரும் இல்லை. ஏனெனில் நம் சாமி சரீரத்தை மறந்தவர். ஆயினும் உடல் வாசம் மிக்கவர்.

நம் சேஷாத்திரி சாமியின் இடது கையில் மூன்று வித சூலம் அமைந்திருந்தது. மூன்று ரேகைகள் ஒன்று கூடி சூலம் அமைத்திருந்தன. இதேபோல் வலது கையில் ஒரு வட்டம் சிகப்பாக அமைந்திருந்தது. இந்த வட்டம் கோள்போல கிரகம்போல அமைந்திருந்தது.

இவைகளை நம் சேஷாத்திரி சுவாமிகளின் தாயார் மரகதம்மாள் கூட அறிய மாட்டார். நம் சுவாமியின் சித்தப்பா ராமசாமி சோதிடர். அவர் மட்டும் இந்த இரண்டு கைகளின் அலங்காரச்சின்னங்களை ஓரளவு பார்த்தவர். என்றாலும் அவரும் சரியாக அறியவில்லை. லேசாக அறிவார்; அவ்வளவுதான்.

இந்தச் சின்னங்கள் அதிசயமானவை. அற்புதமானவை. அதிர்ஷ்டகரமானவை. காமதேனு கற்பக விருட்சம்போல் அள்ளித்தர வல்லவை. அதனால்தான் 'தங்கக்கை' என்ற சிறப்புப் பெயர் வந்தது. அம்பாளின் வரத்தோடு இதுவும் இருந்தது. எந்தத் தவமும் செய்யாத சிறிய வயதில் 'தங்கக்கை' பெயர் கிடைத்ததும் இதனால்தான்.

ஹஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவர் சேஷாத்திரி என்பது தெரியும். பரணியில் பிறந்தவர் தரணி ஆள்வர். அதுபோல ஹஸ்த நட்சத்திரத்தில் பிறந்தவர் தொட்டது துலங்கும். ஹஸ்த பரிபாலனம், ஹஸ்த முத்திரை, ஹஸ்த ஸ்பரிசம், ஹஸ்த பரிவர்த்தனம் என்பவை ஹஸ்த நட்சத்திரத்தின் சிறப்பை விளக்குபவையாகும்.

அத்தகைய ஹஸ்தத்தில் பிறந்தவர் நம் சாமி. என்றாலும் அதிலும் தனிப்பட்ட கடாட்சத்தோடு பிறந்தவர் இவர். இதனால் இவர் மிகுந்த செல்வாக்குடைய கைக்காரரானார்.

## 11. சித்து மைதானம் :

பக்தர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி மழை பெய்யச் செய்வார். இது சாமியின் நிலையிலிருந்த பலருக்கும் கைகூடாதது ஆகும். பல உருவந்தாங்குதல்—ஒரே நேரத்தில் பல இடங்களில் காட்சியளித்தல் ஆகிய சித்துக்களையும் திருவண்ணாமலையில் காட்டினார் நம் சேஷாத்திரி சாமிகள். நூற்றுக்கணக்கில் கருடன்களை வானத்தில் வரவழைத்துக் காட்டியிருக்கிறார்.

அதேபோல் ஒரு வீட்டுத் தோட்டத்தில் பல்வகைப் பறவைகளையும் வரவழைத்து அதிசயம் நிகழ்த்தி உள்ளார். ஒரு நூலை எடுத்து 'பூ' என வாயால் ஊதி அத்தனைப் பறவை களையும் போகவும் செய்து இருக்கிறார். எமப் பட்டிணத்தையும், சொர்க்கத்தையும் மும்மூர்த்திகளையும், பார்வதியையும் தன் பக்தர்களுக்குக் காட்டி இருக்கிறார். இத்துடன், பராசக்தி வடிவமாகக் காட்சி தந்திருக்கிறார். ஒவ்வொன்றையும் விவரித்தால் மிகப் பெரும் நூல் ஒன்றிற்குத் திட விதையாகும்.

ஒரு முறை, பக்தர் முன்னால் விஷத்தை விழுங்கிக் காட்டினார். சரும நோய், வாந்தி, வீக்கம், சன்னி, சிரங்கு, காசம், பித்தவாதம், சுரம், சுளுக்கு, முதுகு பிளவை, விஷ நோய், மேகம், கருங்குஷ்டம், தேள்கடி முதலானவற்றால் பாதிக்கப்பட்ட தம் பக்தர்களுக்கு நிவாரணம் அளித்திருக்கிறார். சாலையில் செல்லும் பெண்களைத் தாய் என வணங்கும் நம் சாமிகள் திருமணமாகாத பெண்களைக் கட்டியணைத்தால் அவர்கள் தோஷம் நீங்கும். திருமணம் நடக்கும். கல்லாப்பெட்டியில் இருந்து காசை இறைத்தால் இலாபம் பெருகும். கன்னத்தில் அறைந்தால் செல்வம் பெருகும். எச்சில் பட்டால் எல்லாம் கைகூடும். திருமண வீட்டில் புனிதத் தட்டினைக் கவிழ்த்துக் கொட்டினால் மாங்கல்யம் பலப்படும்.

குதிரை வண்டியில் ஏறினால் அன்று வருமானம் பல மடங்காகும். வாக்கு வெளிப்பட்டால் தொல்லை நீங்கும். பதவி உயரும். உண்ணும் உணவுக்காக கவனம் செலுத்தா தன்மையும் நம் சாமிகளிடம் நிறைய உண்டு. ஆனால், இவ்வகையில் தன் பக்தர்கள் பலருக்கும் அருட்காட்சி உணவு வழங்கினார் சேஷாத்திரி சாமிகள்.

## 12. மகானின் மகன் :

அன்னை பராசக்தியைக் குறித்து கடுந்தவம் இயற்றி சித்தி பெற்றவர் நம் சேஷாத்திரி மகான். தன்னைப் பார்வதிதேவி—பார்வதிதேவி என அழைத்துக்கொள்வார். பாதாள லிங்கக் குகையில் இரமணர் தவம் புரிந்த சமயம் அது. சில போக்கிரி சிறுவர்கள் கற்களை வீசி துன்பம் விளைவித்தனர். அந்த இடத்தில் திடீரென்று எழுந்தருளி சத்தம் போட்டுச் சிரித்தார். பயந்துகொண்டு சிறுவர்கள் ஓடினர். அங்கு வந்த ஒரு பெரியவரிடம் "என் குழந்தை உள்ளே தவம் செய்கிறான் பார்!" "உங்களுக்கு ஏது குழந்தை" என்று பெரியவர் ஏறிட்டு நோக்கினார். "முன்பே நான் பார்வதிதேவி எனச் சொல்ல வில்லையா? இதோ கந்தனைப் பார்" என்று ரமணரைக் காட்டினார். ரமணரை உலகுக்குக் காட்டிய சுட்டு விரலுக்குச் சொந்தக்காரர் தங்கக்கைக்காரர்.

1928ஆம் ஆண்டு ஜனவரியில் புதிய சோபா ஒன்றை ரமணமகரிஷிக்குப் பக்தர்கள் அளித்தார்கள். அமரக் கேட்டுக் கொண்டனர். "உட்கார வேண்டுமென்று தெரியவில்லையா என்ன? நான் என்ன சேஷாத்திரி சாமியைப் போல தேகத்தை மறந்திருக்கிறேனா?" என மொழிந்தருளினார் தன்னைப் பல நாட்களாகத் தேடி வந்து தரிசித்த ஒரு மாது ரமணரை மனதில் நினைத்தார். உடனே நம் சாமிகள் "அங்கே என்றால் என்ன? இங்கே என்றால் என்ன? இரண்டும் ஒன்றுதான்!" என்றார்.

பாமர மக்களும் படித்தோரும் நம் சாமிகளைப் பெரிய சேஷாத்திரி என்றும் பகவான் ரமணரை சின்ன சேஷாத்திரி என்றும் அழைத்து மகிழ்ந்தனர்.

## 13. சொற்ஜாலம் :

இனிய குரலுக்குச் சொந்தக்காரரான நம் சேஷாத்திரி சாமிகள் பலருக்கும் திருவாய் மலர்ந்தருளிய மொழிகள் மிகச் சிறந்தவை. "ராமாயணம் எப்படி வாசிக்கிறது? ராமாயணம் எப்படி வாசிக்கிறது" என்றார் ஒரு முறை. அதன் பொருள் ராமாயணம் என்பது ராமர் நடந்து காட்டிய வழி. எப்படி வாசிப்பது. நாம் வாழ்ந்து காண்பிக்கவேண்டும் என்பதாகும்.

தன்னைச் சுட்டிக் காட்டி "இதுவே சிவலிங்கம். இதையே பூஜித்தால் போதும். ஞானமடைந்து மோட்சத்தைப் பெறலாம்" என தன் சீடர் ஒருவரிடம் உரைத்தார். இதானது குருபக்தியே மோட்சத்தைத் தருகிறது என்பதின் சுருக்கமாகும்.

"சாதிபேதம், பொன்னாசை இரண்டையும் விட்டால் சமாதி கூடும்" என்றார். மேலும் "ராம ராம மகாபாகோ என்று சொன்னால் மோட்சமடையலாம்" என்றும் சொல்வார். நிலையாமை குறித்து "நாமெல்லாம் ஒரு நாளைக்குப் போகத்தானே போகிறோம்" எனச்சொன்னார். மேலும் "நமக்கு ஒரு வஸ்துவும் சொந்தமில்லை" என்பார்.

"சத்தியம், சாந்தி, அடக்கம், பொறுமை இவைகள்தான் ஒருவருடைய சொந்த உறவினர்கள்" என்பதை அழுத்தந்

திருத்தமாய் அருளினார் நம் சேஷாத்திரி சாமிகள். பகவானைத் தரிசிப்பது எப்படி என்பதற்கு "பலாப் பழத்திலுள்ள பலாச்சுளை போல ஈசுவரனை தியானம் செய்யவேண்டும்" எனப் பகர்ந்தார். மேலும் தியானம் செய்வது குறித்து "கண்ணாடியில் நம் உருவத்தைப் பார்க்கிறோமே அதைப்போல் தியானம் செய்ய வேண்டும்" எனப் புகன்றார்.

"திருப்புகழ்தான் மந்திரம்" என்று திருப்புகழின் பெருமையை விவரித்தார். "ஓம் நமசிவாய" எனத் துதி செய்து அண்ணாமலை உண்ணாமலை இருவரையும் தியானம் செய்தால் வண்டி வண்டியாய் மோட்சம் கிடைக்கும். அருணாசல அருணாசல என்றால் மோட்சம் கிடைக்கும்." இவ்வாறு பலவகையிலும் மோட்சத்திற்கு வழி தந்தார்

"உன் கோபத்தை விட்டுவிடு. யாராவது அடித்தால் திரும்பத் திட்டக்கூடாது. அடிக்கக் கூடாது. பல தெய்வங்களை விடு. ஒன்றையே நம்பு. ஆபத்துக்கு உதவுவான் அவன்" என்றும் விவரித்தார். பலரும் வியக்க சமஸ்கிருத சுலோகங்களை மேற்கோள் காட்டி உபதேசிப்பது நம் சேஷாத்திரி சாமிகள் திருவழக்கம்.

## 14. ஞானங்களின் தேவன் :

மனிதன் முயன்றால் அருளாலும் தியானத்தாலும் முயற்சியாலும் மூலிகையாலும் பெறக்கூடிய அறிவும் உண்டு. இதனை ஞானதிருஷ்டி என்பர். மகான்களுக்கு இத்தகு அறிவு இயல்பாகவே உண்டு. ஆனால் நம் மகானுக்கோ சிறப்பாகவே அமைந்திருந்தது. இதனைக் கண்கூடாகப் பலரும் கண்டிருக்கின்றனர். பிறர் மனத்தை நன்கு அறியக்கூடியவர் நம் தேவன். எண்ணியதை எண்ணியபடியே கூறக்கூடியவர் நம் சாமிகள்.

அதுமட்டுமல்லாமல் நடந்ததையும் சொல்லக்கூடியவர் நம் சேஷாத்திரி மகான். இந்த உலகத்தில் நடந்தது, மேல் உலகத்தில் நடந்தது, தேவ லோகத்தில் நடந்தது, எம லோகத்தில் நடந்தது, சொர்க்க லோகத்தில் நடந்தது, கனவுலகில் நடந்தது, ஆவிகள் உலகில் நடந்தது அனைத்தையும் அறிந்து வைக்கக்கூடிய அறிவும் பெற்றிருந்தார். இதனை வடமொழியில் 'அதீதஞானம்' என்று மொழிவர்.

இத்துடன் நடக்கப்போவதை அறியக்கூடியவராகவும் இருந்தார். வருவதை உரைக்கும் வரம் பெற்றவர். என்ன எப்போது எங்கு எப்படி நடக்கப்போகிறது என்று உறுதியிட்டுக் கூறக்கூடியவர் நம் மகான் சேஷாத்திரி சாமிகள். இதனை 'அனாகத ஞானம்' என்றும் உரைப்பார். மேலும் ஒருவர் கண்ட கனவை அறிவதும், பிறர் கனவில் புகுவதும் சாமி அறிந்த, பெற்ற ஞானங்களில் ஒன்றே; இதற்கும் வடமொழியில் பெயர் உண்டு. அதனைச் சொப்பன திருஷ்டி என்பர்.

நம் சேஷாத்திரி மகான் பிறருடைய கிரகநிலைகளை அறிவதிலும், ஜோதிடத்தை உறுதியிட்டுக் கணிப்பதிலும் சிறந்தவராவார். அதுமட்டுமின்றி சூட்சும திருஷ்டியும் கொண்டவரே நம் மகான். நுண்ணிய பொருளையும் அறியக் கூடிய அறிவுக்கே இத்தகைய பெயர் வாய்க்கும். இந்த சூட்சும திருஷ்டியைக் கொண்டு திருவண்ணாமலையில் மகான் சேஷாத்திரி சாமிகள் நிகழ்த்திய அதிசயத்தை ஊரே அறியும்.

அது 1909ஆம் ஆண்டில் நடந்தது. திருவண்ணாமலைக்கு 34 கிலோ மீட்டர் தூரத்தில் வேலூர் செல்லும் வழியில் உள்ளது ஓரூர். அதன் பெயர் போளூர் ஆகும். அங்கு சுமார் 25 ஆண்டு களாக வாழ்ந்து வந்தார் விடோபா சாமிகள். இவரும் நம் சாமிகளை நிகர்த்த பெரிய மகான்; பல சித்துக்கள் நிகழ்த்தியவர். இவர் காய்ச்சலில் வீழ்ந்தார். இன்னும் மூன்று நாளில் இறந்து விடுவேன் எனத் தன் சீடர்களிடம் கூறினார்.

இந்நிலையில் ஓர் நாள் சேஷாத்திரி சாமிகள் திருவண்ணாமலையில் காலையில் சாலை வழி நடந்து கொண்டிருந்தார். திடீரென்று வானத்தை நோக்கி விடோபா போகிறான் விடோபா போகிறான் என உரக்கக் கூறினார். மக்களுக்கு ஒன்றும் புரியவில்லை. சிறிது நேரத்தில் போளூரில் இருந்துவந்த செய்திகள் இதனை உறுதிப்படுத்தின காலையில் விடோபா சாமிகள் போளூரில் இறந்த உடனே அவரின் ஜீவ ஆன்மா இறைவனுடன் கலக்கப் போவதை காணும் ஆற்றல் பெற்றிருந்தார். நம் சேஷாத்திரி தேவனின் ஒவ்வொரு அறிவையும் முழுமையாக அறிந்து ஆனந்தமயம் ஆனவர் பற்பலர்.

## 15. அசையாக்கோலம் :

அன்னையின் ஆசைப்படி அண்ணாமலை அடிவாரம் சேர்ந்தவர் நம் சாமிகள். 1889க்குப் பின் திருவண்ணாமலையை அடைந்தார்.அதன்பின் முக்தியடையும்வரை அவர் தம் கால்களும் உடலும் இவ்வூர் எல்லையைத் தாண்டியதில்லை. தாய்ச் சொல்லைத் தட்டாதவர் நம் மகான்.

ஒருமுறை சீடர்களில் சிலர் நம் சாமிகளை தங்கள் ஊர் எழுந்தருள வேண்டுமென விரும்பினர். சாமிகளை வேண்டினர். சாமியோ இசையவில்லை. பக்தி மேலீட்டால் நம் சேஷாத்திரி சாமிகளை வலுக்கட்டாயமாக தங்கள் ஊர்க்கொண்டுபோக ரயில் ஏற்றினார்கள். சாமிகள் கடத்தப்படும் ரயில் புறப்பட்டது. ஓடத் தொடங்கியது. திருவண்ணாமலை எல்லை தாண்டும் நிலையில் நம் சத்குரு ஓடும் ரயிலில் இருந்து கீழே குதித்தார் ஜனங்கள் பார்த்தார்கள். ரயில் நிறுத்தப்பட்டது. எஞ்சின் டிரைவர், கார்டு, பயணிகள் அனைவரும் கீழே இறங்கி வந்தனர்.

ஓசிப்பயணி என்றும், தற்கொலை முயற்சி என்றும் பலவகையான புரியாதோர் பேச்சுக்கள். திருவண்ணாமலை-யிலிருந்து காட்பாடி செல்லும் புகைவண்டி அது. சாமிகளை போலீசில் ஒப்படைக்க வேண்டுமென்று ரயில் கார்டு முடிவெடுத்தார். சாமிகளை ஏற்றிப் புறப்படத் தொடங்கினர். முடியவில்லை. காரணம் தெரியவில்லை. எஞ்சின் டிரைவர் தொழில் நுட்பத்தோடு மேற்கொண்ட முயற்சிகள் தோல்வி அடைந்தன. ரயில் புறப்படவில்லை.

அந்தப் பக்கம் வந்த மூவர் செய்தி அறிந்தனர். சாமிகளை வணங்கினர். காயங்களைத் துடைத்தனர். அவர்கள் ஏடி. முனுசாமிப் பிள்ளை, ஆர்ப்பாக்கம் ரங்கப்ப ரெட்டியார், துரிஞ்சாபுரம் வெங்கட்ராம ரெட்டியார். இவர்கள் சாமியின் புகழை விளக்கிக் கூறினர். தவறுக்கு மன்னிப்புக் கேட்கச் சொல்லினர். தவற்றை உணர்ந்தனர் ரெயிலின் கார்டும் டிரைவரும். வீழ்ந்து வணங்கினர் நம் சாமிகளை. மன்னிப்புக் கோரினர்.

சாமி ரயில் பெட்டிகளைத் தட்டிக்கொடுத்தார். கண்களால் பார்த்தார். கண்ஜாடையால் "போ"வெனச் சொன்னார். எஞ்சின் டிரைவர் ரெயிலை ஓட்டும் முயற்சியில் வென்றார். ஆம் ரயில் ஓடியது. அத்துடன் திருவண்ணாமலை வந்த நாள்முதல் முக்தி பெற்ற நாள் வரை சாமி திருவண்ணாமலை விட்டு நீங்காமல் நிலைத்த அதிசயத்திற்கு சாட்சிபகரும் காட்சியும் அரங்கேறியது.

## 16. கேள்வி ஞானம் :

மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் திருவண்ணாமலையில் தன் முன்வினையைத் தீர்த்துக்கொண்டிருந்த காலம். ஒருநாள், மலையிலுள்ள குளத்தில் ஹடயோகம் செய்துகொண்டிருந்தார், நம் சாமி. அப்போது சப்த ரிஷிகளும் தோன்றினர். சேஷாத்திரி சுவாமிகள் வணங்க அவர்களும் ஆசி கூறினார். "உன்னைப் பரிட்சிக்கப் போகிறோம்" என்று சாமியிடம் சப்தரிஷிகள் சொன்னார்கள்! திடுக்கிட்டார் சேஷாத்திரி. சோதித்தார்கள்; குளித்துக்கொண்டிருந்த குளத்தில் அடிப்பாகத்தில் இருக்கும் வண்ண வண்ண மணல் வகைகளை ஒன்றாய் எடுத்து கயிறாகத் திரித்துக் காண்பிக்கவேண்டும் என்பதே சோதனை.

அஞ்சினார் சேஷாத்திரி. தன்னால் முடியாது என்றார். "உன்னால் முடியும் செய்" என்று ஊக்கப்படுத்தினர் சப்தரிஷிகள். அம்பாளை வேண்டி ஆழத்தில் மூழ்கினார் சாமி. உள்ளே, உள்ளே, ஆழத்தில் இன்னும் ஆழத்தில் இன்னொரு குளம் பரந்து விரிந்து கிடந்தது. அதில் மூழ்கித் தரை கண்டார். என்ன ஆச்சர்யம்! உள்ளே வண்ண வண்ண மணல், கறுப்பு, சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம், மண் நிறம் மற்றும் பாலினும் வெண்மை என 7 நிற மணல் கிடந்தது. மணலைக் கயிறாகத் திரிக்க வேண்டுமே? "தாயே லோகமாதா பராசக்தி" என வேண்டினார். அம்பாள் மந்திரத்தை ஜெபித்தார். கையில் எடுத்தார். திரித்தார். வெளியே கொண்டு வந்தார்.

சப்தரிஷிகள் வாங்கிப் பார்த்தார்கள். ஒரு நிறம் காணவில்லை. அது பாலினும் வெண்மை நிறம். பாலின் நிறம் மனத்தைக் குறிக்கும். அந்த நிறம் மட்டும் இல்லை என்பதால் தன் மனம் சுத்தமாக இல்லையோ என மனம் வருந்தினார் சேஷாத்திரி. ஆனால் உண்மை அதுவல்ல. நம் சாமி அம்பாள்

பக்தர். அம்பாளின் அத்தனை நிறங்களையும் தொட்டு எடுத்து கயிறாக்க அவரால் முடிந்தது. பாலினும் வெண்மை நிறம், திருநீற்றின் நிறம், திருநீற்றின் அதிபதி சிவபெருமான். அம்பாள் கடாட்சம் பெற்ற நீ சிவஜோதி அய்க்கிய பாவத்தில் கலக்க தியானத்தை கடுமையாக்கவேண்டும் என்பதே அதன் பொருளாம். வண்ண மணல் கயிறு திரித்ததை சப்தரிஷிகள் வெகுவாகப் புகழ்ந்து "நீ தேறிவிட்டாய்" என வாழ்த்திப் போனார்கள்.

ஒருமுறை தேர்ச் சக்கரத்திற்கு அடியில் சென்ற குழந்தையைக் காப்பாற்றி அரிய சாதனை செய்தார் மகான் சேஷாத்திரி.

காளவஸ்திரம் அணிந்த வேறொரு மகான் திருவண்ணாமலைக்கு வந்திருந்தார். வடநாட்டில் கடுந் தவமியற்றியவர். ஏதோ தீவினையால் தன் சக்தி குறையவே தென்னாடு வந்தவர் அவர். திருவண்ணாமலை பெரிய சேத்திரம் என்றறிந்தார். அதன் மலையில் தங்கித் தவமிருந்தால் மூலிகையைக் கொண்டு செங்கல் அளவுக்கு தங்கக்கட்டி செய்யலாம் என்ற நப்பாசை அவருக்கு. எனினும் அன்றாடத் தேவைக்காக திருவோடு ஏந்தி பிச்சை எடுத்தார்.

ஒருநாள் மகான் சேஷாத்திரி ஜெபத்தில் இருந்தார். அப்போது அந்தப் பக்கம் போன அந்த வடநாட்டு மகான் இவரைப் பார்த்தார். "பார்த்தால் பிச்சைக்காரனைப்போல இருக்கிறார். இவரிடம் என்ன கிடைக்கப் போகிறது" என எண்ணியபடியே கண்மூடிக் கிடந்த சேஷாத்திரி சுவாமிகள்முன் திருவோட்டை நீட்டினார்.

ஜெபம் செய்வதற்காக வலது காலை மேலே வைத்து இடது காலை கீழே வைத்து ஆசனம் போட்டிருந்தார் நம் மகான். தன் ஞான திருஷ்டியால் திருவோடு நீட்டப்படுவதையும், நீட்டுபவரின் மனநிலையையும் அறிந்தார். வலது காலைத் தூக்கிக்கொண்டு இடது காலை நீட்டி எட்டித் திருவோட்டில் உதைத்தார் நம் சாமி. 'ணங்' எனச் சத்தம் கேட்டது. வடநாட்டுச் சாமியார் தன் திருவோட்டைப் பார்த்தார். தங்க ஒளி மின்னியது. உற்றுப் பார்க்கையில் தன் திருவோட்டில் 'மொகரா' என்ற

நாணயம் ஒன்று விழுந்து கிடந்தது. சேஷாத்திரி சுவாமியின் மகிமை அறிந்தார். வணங்கினார். திருவண்ணாமலை தலத்தை விட்டே ஓடினார்.

அப்போது முஸ்லீம் ஒருவர் டீக்கடை வைத்திருந்தார். அது பஜாரில் இருந்தது. அங்கு பரோட்டா வியாபாரமும் உண்டு. அதற்குத் தேவையான மைதா மாவு மூட்டையில் வைக்கப் பட்டிருக்கும்.

ஒருநாள் இரவின் தொடக்கக் காலம். சேஷாத்திரி சாமி அந்த பங்க் கடைக்குப் போனார். மூட்டையில் இருந்த மைதாவை எடுத்து டீக்கடை தண்ணீர் டிரம்மில் கொட்டிவிட்டார். டீக்கடை பாய்க்கு கோபம் வரவில்லை. ஆனால் நனைந்த மைதாவை என்ன செய்வது எனத் திகைத்தார். கலங்கினார். சேஷாத்திரி சாமி போய்விட்டார்.

திடீரென்று ஒரு லாரி வந்தது. சர்க்கஸ் கம்பெனி லாரி அது. திருவண்ணாமலையில் முகாமிடப் போவதாகவும், சாப்பாடு செய்ய நேரமில்லாததால் பரோட்டா மொத்தமாக சப்ளை செய்ய ஆர்டர் கொடுத்தனர். மகிழ்ந்தார் பாய்.

மலை சுற்றும் சாலையில் அப்போது இருந்தது ஒரு செங்கல் சூளை. அந்தச் சூளையின் சொந்தக்காரர் தெய்வ பக்தி கொண்டவர். ஆனாலும் சூளையில் அவருக்கு லாபமே இல்லை. ஒருநாள் அந்தப் பக்கம் போன நம் சேஷாத்திரி சாமி எரிந்து கொண்டிருந்த சூளையின்மீது ஒரு பிடி மண்ணை அள்ளிப் போட்டார். எரியும் சூளையில் மண்ணையள்ளிப் போடுகிறாரே என்றுதான் பலரும் எண்ணினர். அதற்குப் பின்னால் அந்தச் சூளை விருத்தியடைந்தது. சூளைக்காரரும் லாபம் அடைந்தார். ஆனால் அந்தச் சூளையில் சூனியம் வைக்கப்பட்டிருந்தது என்பதும் சாமி மண் போட்டுத்தான் அதை நிவர்த்தி செய்தார் என்பதும் எவருக்கும் தெரியாது.

நம் சாமி தியானத்தில் இருந்தபோது இது நடந்தது. என்னவென்றால் வடநாட்டில் ஓரிடத்தில் மிக அதிகமான பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு ஒரு ரயில் போய்க்கொண்டு இருந்தது. வழியில் தண்டவாளம் லைன் மாறிக் கிடக்கிறது. இதை எவரும் கவனிக்கவில்லை. அந்த வழியே போனால் எதிரில்

அதே லைனில் வரும் வேறொரு ரயிலில் மோதுவதைத் தவிர வேறு வழியில்லை. இதனால் மிக பலத்த உயிர்ச் சேதம் ஏற்படும். அதனைத் தன் தவ மகிமையால் அறிந்தார் மகான் சேஷாத்திரி. தான் பெற்றிருந்த வரத்தால் இங்கிருந்தபடியே அந்த ரயிலைப் போகவிடாமல் நிறுத்தினார். ரயிலும் நின்றது. விபத்தும் தடுக்கப்பட்டது. அந்த விபத்து மட்டும் நிகழ்ந்திருக்கு-மானால் இந்தியாவிலேயே மிகப்பெரிய ஆக்ஸிடெண்ட் அதுவாகத்தானிருக்கும். தடுத்தவர், தவிர்த்தவர் நம் சேஷாத்திரி சுவாமிகள். கண்களால் உற்றுப் பார்த்து தவம் கலையாமல் ரயிலை நிறுத்தினார் சாமி. அவ்வளவு தவவலிமை.

திருவண்ணாமலையில் சுவாமிகள் அலைந்து திரிந்தபோது ஒருமுறை பிளேக் நோய் பரவியது. மக்கள் அஞ்சி நடுங்கினர். முடிந்தவர்கள் வேற்றூர் போயினர். இயலாதவர் இருந்து இறந்தனர். அப்போது தன் சக்தியை ஓரளவு மட்டுமே வெளிப்படுத்தினார். கடவுள் அவ்வளவுதான் என கட்டளை இட்டாராம்.

சுவாமிகளுக்கு அப்போதும் சாதி வேறுபாடில்லை. துலுக்க மதத்தைச்சார்ந்த பலருக்கும் அருள்புரிந்திருக்கின்றார். அப்போதும் பல முஸ்லீம்களைச் சீடராய்க் கொண்டிருக்-கின்றார். இதுபோன்ற செயல்களால் அய்யர்கள்கூட சாமியை ஒதுக்கி வைத்தனர். இறுதிச் சடங்கையும் மற்றவர்களே செய்தார்கள். பொதுவாக மனிதர்களால் சாமி அதிகத் துன்பப் பட்டிருக்கிறார். இன மத மொழித் துவேசம் அப்பொழுதும் சாமிக்குக் கிடையாது.

ஒருநாள் நம் சாமி ஒரு சவ ஊர்வலத்தின் பின்னால் போய் இருக்கிறார். பிணத்தைத் தொட்டு ஆசீர்வாதம் செய்திருக்கிறார். இதைப் பலரும் கண்டனர். சவ ஊர்வலத்தில் வந்த சாமி ஒரு கலியாண வீட்டைப் பார்க்கிறார். நேராக அந்த வீட்டில் நுழைகிறார். சவ ஊர்வலத்தில் இருந்து திருமண வீட்டிற்குள் வந்துவிட்டாரே என்று பலரும் முகம் சுளித்தனர். சிலர் மனதுக்குள் ஏசினர் என்றாலும் சாமி விடுவிடுவென்று நேராக கலியாண வீட்டின் சமையலறைக்கே போனார். அண்டாவில் சாம்பார் கொதித்துக் கொண்டிருந்தது. அண்டாவைப் பிடித்தார். இழுத்தார். கீழே தள்ளினார்.

கடகடவென சாம்பார் கீழே கொட்டியது. சாமி ஏனிப்படி செய்தாரென திகைத்தனர், பலர். பைத்தியக்காரனைப் பிடி அடி எனத் துடித்தனர் சிலர். ஆனால் அத்தனைபேரும் அசந்து நின்றுவிட்டார்கள். காரணம் இதுதான். கொதித்துக் கொண்டிருந்த சாம்பாரில் நல்ல பாம்பு—நாகப்பாம்பு செத்துக் கிடந்ததைக் கண்டனர். சாமி இப்படிச் செய்யாவிட்டால் எத்தனை பேர் இறந்திருப்போம் என எண்ணினர். வணங்கினர்.

## 17. பழைய கானம்

இதுவரை மகானின் சரிதங்கள் எவற்றிலும் வராதனவை இன்னும் சில உண்டு. சுவைக்கவும் திகைக்கவும் இங்கே அவை:

அன்ன ஆகாரம் சாப்பிடாமலேயே வாழ்ந்து இருக்கிறார். பசி என்பது அவருக்கு எப்பொழுதும் ஏற்பட்டதில்லை. சாப்பிடுவது போலவும் துப்புவது போலவும் செய்திருக்கிறார் அது பாவனை; அவ்வளவுதான்.

சின்ன சின்ன ஹோட்டல்களில் எல்லாம் புகுந்து சாப்பிடுவது போல் உட்கார்ந்து வந்திருக்கிறார். குறிப்பாக ஒரு லாலா கடையில் நம் சேஷாத்திரி சாமி இப்படி செய்வார்.

தேரடி வீதி நீலகண்டராவ் வீட்டில் சாப்பிட்டு இருக்கிறார். மீனாட்சி அம்மாள், அலமேலு அம்மாள் ஆகியோர் வீட்டுச் சாப்பாடும் நன்கு பிடிக்கும். ஆனால் ஓரிரு கவளம் உண்ண மாட்டார். திருவண்ணாமலையில் இருந்த ஆண்டு களில் ஏறத்தாழ 30 ஆண்டுகள் அவர் சாப்பிடாமலேயே இருந்திருக்கிறார்,

தாழ்த்தப்பட்ட சாதியைச் சேர்ந்த மாது ஒருத்தி சேஷாத்திரி சுவாமிக்குத் தொண்டு புரிந்து வந்தாள். அவளோடு நயமாகப் பேசிய ஒருவர் அசைவ உணவைச் சமைத்து அந்தப் பெண் மூலமாகவே சாமியிடம் அனுப்பினார். அப்படி அனுப்பியவர் ஆனைக்கட்டித் தெருவைச் சேர்ந்த இடிந்த வீட்டின் சொந்தக்காரர். உள்ளே இருப்பது என்னவென்று

தெரியாத அந்தப் பெண்மணி அந்த அசைவப் பொட்டலத்தை கொண்டுபோய் சாமியிடம் கொடுத்தாள்- அதை தொட்டு அப்படியே திருப்பிக் கொண்டுபோய் சாமி கொடுத்தவனிடமே கொடுக்கச் சொன்னார். அவளும் அப்படியே செய்தால். கொடுத் தவன் வாங்கிப் பார்த்தான். என்ன அதிசயம். அத்தனையும் சைவ போண்டாக்கள்.

சுண்டல் வியாபாரி ஒருவன் அவன் பாமரன். பக்திரஸம் அறியாதவன். சாமி கும்பிட மாட்டான். அவன் சாமியைக் கண்டான். பழக்கவழக்கம் மாறியது. சாமியின் சொல்படி முழுக்கடலை சுண்டல் போட்டு விற்கலானான். தேவிக்கு விருப்பமானது முழுக்கடலை சுண்டல். சேஷாத்திரி சுவாமிகள் சொற்படி தினந்தோறும் முழுக்கடலை சுண்டல் செய்து தேவிக்கு நிவேத்தியம் செய்து அதன் பின்னரே விற்கப் போனான். பிரமாதமான வியாபாரம். சுண்டல் விற்ற நேரம் போக பிற நேரங்களில் சாமி பின்னாலேயே தொண்டாற்றி வந்தார். பிற்காலத்தில் கோயில் அருகில் சொந்தமாகக் கடை வைத்தார்,

நம் சுவாமிகள் முதலில் தன் சமாதியை மலை சுற்றும் சாலையில் நேர் அண்ணாமலையைத் தாண்டி அமைத்துக் கொள்ளவே விரும்பினார். கலியுக மக்கள் பிற்காலத்தில் தன் அதிஷ்டானத்தைத் தேடி இவ்வளவு தூரம் வரமாட்டார்கள் என அறிந்தார். அடிமுடிசாமி சமாதிக்கு அருகில் திருமூர்த்தி தரிசனம் காணுமிடத்தில் தேவர்கட்கு மிக உகந்த இடத்தில் தான் தன் சமாதி அமையவேண்டும் எனஇடத்தைத் தேர்ந்தார். பின்னர் மேற்கண்ட காரணத்தால் அம்முயற்சியைக்கைவிட்டார். அதன் பின்னரே செங்கம் சாலையில் தற்போது தன் உடல் உள்ள இடத்தைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்.

ஆனால் சேஷாத்திரி சுவாமிகள் முதலில் தேர்ந்தெடுத்த திரிமூர்த்தி தரிசனம் எனப்படும் மலை திரிசூலமாகத் தோன்றும் மேற்சொன்ன இடத்தில் நெடுங்காலம் தவமிருந்தார். அப்போது மலை சுற்றும் பாதை எங்கும் புதர்கள் மண்டிக் கிடந்தன. நடக்கவே அஞ்சும் நாட்கள் அவை. எனினும் பக்தியுள்ள மக்கள்

அப்போதும் மலைசுற்றினர். நம் சுவாமியை எங்கு கண்டாலும் மக்கள் விழுந்து வணங்குவதும் உபசரிப்பதும் புது ஆடைகளை உடுத்தி விடுவதும், குளிப்பாட்டுவதும், உணவு வகைகளை ஊட்டி விடுவதும், ஆசீர்வாதம் கேட்பதும் வழக்கம், இதனால் சாமியின் தியானம் தடைப்பட்டது.

எனவே மலை சுற்றும் வழியில் முன்கண்ட இடத்தில் சாமி அமர்ந்து தனிமையாக இனிமை காணலானார். புதர்கள் சூழ்ந்த அந்தப் பிரதேசத்தில் மேலாடை இன்றி சாமி உட்கார்வார். தன் மேல் அங்கிருந்த கறுப்பு சிவப்பு நிறம் கலந்த மண்ணை வாரிக் கொட்டிக் கொள்வார். தலையில் போடும் மண்ணானது தலை, முகம், உடலெங்கும் சிந்தியது. மண் குவியலில் இருந்த சேஷாத்திரிகள் மற்றவர் கண்களுக்குப் புற்றாகத் தோன்றினார். -மண்படாத முகத்தின் கண்களின் சிறப்பைக் காண முடியாத வழிப்போக்கர்களான பக்தர்கள் அதை புற்று என்றும், அசையும் கண்களை நாகம் என்றும், பலவிதமாகப் பேசி அஞ்சியோடினர். நம் சேஷாத்திரி சுவாமி களும் பக்தர்களின் அன்புத் தொல்லையின்றி நெடுநேரம் தியானித்தார்.

சேஷாத்திரி சுவாமிகளுக்கு அதிகாரத்தாலும், எதிரி களாலும், விஷத்தாலும், மந்திரத்தாலும் ஆபத்துக்கள் வந்தன. எப்படியும் ஒழித்திடவேண்டும் என்பதில் குறியாய் இருந்தனர். ஏசுநாதரைப் போல இவர் பலமுறை காட்டிக் கொடுக்கப் பட்டார். விஷமிகளின் சதியினால் பிளேக் காலத்தில் ஒரு முறை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டு, அமர்க்களம் செய்கிறான், மந்திரவாதி, பைத்தியக்காரன் என்றெல்லாம் குற்றம் சாட்டப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டார். செய்தவர் களைக் காட்டிக் கொடுக்க இப்போதும் சாமி விரும்பவில்லை.

திருவண்ணாமலை வரும் முன் எல்லா தரிசனங்களைப் பெற்றிருந்தாலும் பரம்பொருள் தரிசனம் இங்கு வந்தபின் தான் கிடைத்தது.

கண்டாரும் இல்லை, விண்டாரும் இல்லை எனப்படும் பரம்பொருளின் முழுவடிவம். ஜோதியாகத்தான் உயர் நிலை

ஞானிகள் பலரும் கண்டு வணங்கினர். ஆனால் நம் சேஷாத்திரி சுவாமிகள் போன்ற சிலர் மட்டும் உருவமாகக் கண்டு வணங்கினர்.

சேஷாத்திரி சுவாமிகளை சோதனை செய்தவர்களில் அகஸ்தியரும் உண்டு. வாக்குவாதம் செய்து பந்தயம் வைத்து சோதித்தபின்தான் "சேஷாத்திரி சுவாமிகளுக்கு மேலே வர தகுதி இருக்கிறது'' என்றார். அத்தகைய தவ வலிமை நம் சாமிக்கு.

மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் விலங்குகளுக்கு சகாயம் செய்தவர் நம் சாமிகள் ஒரு முறை கோமாரி வந்த மாட்டினைத் தொட்டுத் தடவி சொஸ்தமாக்கினார். அதைப்போலவே சாயபு பக்தர் ஒருவரின் நொண்டிக் குதிரையின் காலை நீவி விட்டு குணப்படுத்தினார். ஓடாத குதிரையை ஓடவைத்தார்.

குடியானவர் முதல் பணக்காரர் வரை பாகுபாடின்றி சித்துக்கள் புரிந்துள்ளார். விஷத்தால் பாதிக்கப்பட்ட பலருக்கும் மூன்று வழிகளில் விஷத்தைக் குறைத்து சொஸ்தப்படுத்தினார் சேஷாத்திரி. அவையாவன; வாயை வைத்து உறிஞ்சுதல், சிரித்தல், முகத்தில் படாமல் மணலால் அடித்தல் ஆகியனவாகும்.

மலை சுற்றும் வழியில் செங்கம் சாலை அருகில் முன்பெல்லாம் ஒரு சவுக்குத்தோப்பு இருந்தது. நம் சேஷாத்திரி சாமி ஜெபம் செய்துவிட்டு அந்த வழியாகப் போனார். அங்கே இரண்டு திருடர்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். தாங்கள் திருடிவந்த நகையைப் பங்கு போட்டுக் கொள்ளு வதிலேயே அவர்களுக்குள் தகராறு ஏற்பட்டிருந்தது. ஒருவனை மற்றொருவன் தாக்கினான். கை துண்டிக்கப்பட்டது. கை துண்டிக்கப்பட்டவன் துடித்துக் கொண்டிருக்கையில் மற்றொருவன் நகையுடன் ஓடிப்போனான். அந்தவழியாக வந்த சாமி இதனைக் கண்டார். கைத் துண்டிக்கப்பட்டவன் அருகில் சென்றார். துண்டிக்கப்பட்ட கையை இணைத்தார், மந்தரித்தார். வெட்டிய கை ஒட்டியது.

அந்தப் பாக்கியம் பெற்றவனின் பெயர் இருசன். பத்ர காளியம்மன் எழுந்தருளிய அருவங்காட்டைச் சார்ந்தவன். கழுத்தில் தாயத்துக் கட்டியிருப்பான். தலை வாராமல் பரட்டைத் தலையாயிருக்கும். சாமி கூடவே மேற்படி இருசன் பலகாலம் சுற்றி வந்தான்.

## 18. சாலையின் சந்திப்பு

1928 ஆம் ஆண்டு தன் காலத்தை முடித்துக்கொள்ளும் பருவம் மார்கழி மாதம். சில பத்தர்களுக்குத் தாளாத ஆசை. நம் சாமிகளுக்கு அபிஷேகம் ஆராதனை நடத்திப் பார்க்கத் துடித்தனர். ஓர் நாள் நம் சாமிகளை உட்கார வைத்து முகம் மழித்தனர். எத்தனையோ முறை அரை குறை சவரத்தில் எழுந்து ஓடிய நம் மகான் அசையாது உட்கார்ந்தார். முகப் பொலிவில் பக்தர்கள் மகிழ்ந்தனர். பன்னீர், பால், இளநீர் அபிஷேகமும் நடந்தேறின. நாலய்ந்து பக்தர்கள் குடத்தில் நீர்கொண்டு வந்து ஊற்றினர். "வேண்டாம். குளிர்க் காய்ச்சல் வரு" மென்று தவிர்க்க முற்பட்டார் சாமிகள். கேட்கவில்லை பக்தர்கள். தண்ணீர் அபிஷேகத்தைக் கண்ணுற்றனர் சிலர். சிலர் பலராயினர்.

பக்கத்திலிருந்த கிணறு வற்றுமளவிற்கு, திருக்கோயில் சிவகெங்கையும் வற்றுமளவிற்கு அவ்வளவு நீரும் பக்கதர்களால் குடத்தில் கொண்டு வரப்பட்டு சாமியின் தலையில் கொட்டப் பட்டது. அன்று மாலையே சேஷாத்திரி சாமிகள சொன்னது போலவே குளிர்க் காய்ச்சல் வந்தது. அன்று முதல் அன்ன ஆகாரம் தீண்டவில்லை. நீரும் அருந்தவில்லை "நோய் தீர்த்த வள்ளல் சிறு நோய்க்குத் தன்னைக் கொடுத்தார்" எனப் பலரும் பேசினர். செய்தி பரவியது. மக்கள் கூட்டம், சென்னை யிலிருந்தும் பிற இடங்களில் இருந்தும் பெருகியது.

மருத்துவர்கள் விரைந்தனர். ஆனால் மருந்து பூண மறுத்தார் சாமிகள். சாமிகள் அந்த நிலையிலும் சித்துக்கள் நிகழ்த்தினார். கண்களால் அருள் பாலித்தார். திருநீர் முழுக்காட்டி, திருநீறு அணிவித்து பூமாலைச் சூட்டி, ருத்தி

ராட்சம் பூட்டி, புகைப்படம் எடுக்க எண்ணி பக்தர்கள் வற்புறுத்தினர். சன்னதி அக்ரகாரம் சின்ன குருக்கள் வீட்டுத் திண்ணையில் அமர்ந்தவர் அப்படியே இருந்தார். அப்பொழுது ஒரு அதிசயம் நடந்தது.

சாமிக்கு குளிர்க் காய்ச்சல் என்று பாமரம் சொன்னது. ஆனால் உண்மை அதுவல்ல. சேஷாத்திரி சுவாமிகளின் தவ வலிமை கண்டு மகிழ்ந்தனர். சிவனும் சக்தியும் அண்ணாமலையார் உண்ணாமலையம்மன் ஆகிய இருவராகவே வந்து சேஷாத்திரி சுவாமிகளின் உடலில் இறங்கி அய்க்கியமாகினர்.

எவருடைய உடலிலாவது அம்பாள் இறங்கினாள் என்று சொன்னால் அவர்கள் முக்தி அடைந்து விடுவார்கள். ஆனால் சேஷாத்திரி சுவாமிகளுக்கு முக்தி அளித்து அழைத்துக்கொண்டு போக உமையொரு பாகனாகவே இருவரும் வந்தனர். இது நம் சேஷாத்திரி சுவாமிகளுக்கு மட்டுமே கிடைத்த அரிய வாய்ப்பு. வேறு எவருக்கும் கிடைக்கவில்லை.

சிவனும் சக்தியும் தன் உடலில் இறங்கியதும், பரவச நிலையும் பேரானந்தமும் அடைந்தார் சேஷாத்திரி சுவாமிகள். தன் உடலில் சிவனும் சக்தியும் குடிகொண்ட நிலையிலேயே அவர்களைத் துதிக்க உத்திரவு கேட்டார். ஆச்சர்யமான உண்மை; உடனே முக்தி கொடுக்காமல், "உன் உடலிலேயே எங்களை வைத்து துதித்துக்கொள்" என்று உத்திரவு வேறு கிடைத்தது.

அந்த நிலையில்தான் நம் சாமியின் உடல் குளிரில் நடுங்கியது. காய்ச்சலில் கொதித்தது. இதையே குளிர் காய்ச்சல் என்றனர் மக்கள். உண்மை அதுவல்ல. சிவன் வெப்பத்தின் வடிவம். சக்தி குளுமையின் சொரூபம். சிவனும் சக்தியும் சாமியின் உடலில் அய்க்கியமாகியிருந்தனர். அப்போது குளுமையும் வெப்பமும் குடிகொண்டிருந்தது. குளிரில் நடுங்கியது காய்ச்சலில் கொதித்தது என்றால் அது நியாயமே.

கடைசி நாட்கள் அந்த நாட்கள். அப்போது மகான் முகத்தில் பிரகாசமான தேஜஸ். அந்நிலையில் மகானைத் தரிசித்தவர்கள் சேஷாத்திரி மகான், அம்பாள், சிவபிரான் என மூவரையும் நேரில் கண்ட நிலை அடைந்தவராவர். பாக்யம் பெற்றோரும் ஆவர். மகான் விரும்பிக் கேட்டுக் கொண்டதால், தவவலிமை மிக்கவராய் இருந்ததால் மகான் தம்முன் சிவசக்தி நிலை நிறுத்தி மூன்று நாட்கள் தியானித்தார்.

அழைத்துப் போக வந்தவர்களையே அமரச் செய்த அரும் பெரும் ஞானி நம் சாமி. மூன்று நாட்களுக்கு முன் முக்தி அடைந்திருக்க வேண்டியவர் மூன்று நாட்களுக்குப் பின் முக்தி அடைந்தார். இது உலக மகா அற்புதம் ஆகும்.

விபவ ஆண்டு ஜனவரித் திங்கள் 21ம் நாள் —1929ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 4 ஆம் நாள்—நம் சேஷாத்திரி சாமிகள் பரம்பொருள் கலந்தார். சாமிகள் பிறக்கும் போது இருந்த கிரகங்கள் நிலையே முக்தி நாளிலும் அமைந்தது மகான்களுக்கே கிடைக்கக்கூடிய மாபெரும் வாய்ப்பு.

திருவண்ணாமலையே இருளில் மூழ்கியது. சோகமும் துக்கமும் நீக்கமற நிறைந்தது. கடைகளில் கற்பூரமே காலி. வெளியூரிலிருந்து பஸ்களெல்லாம் தன்னை நிரப்பி வந்தன. சன்னதி வீதி தரிசனபுரமானது. பக்தர்கள் திரண்டனர். திருப்பாடல் ஓதினர். புனித ஊர்வலப் புறப்பாடு நடந்தது. கால்களெல்லாம் செங்கம் சாலை நோக்கியே. எந்தச் செங்கம் சாலை சுடுகாட்டில் வந்து ஆடினாரோ சித்துக்கள் காட்டினாரோ அத்தச் செங்கம் சாலை சுடுகாட்டில் மலையடிவாரத்தில் அக்கினிலிங்கமும் தீர்த்தமும் அருகே சூழ்ந்த நிலையில் திருமந்திரக் கூற்றுப்படி சமாதி வைக்கப்பட்டார். ரமணர் வந்து சிறிது நேரம் இருந்து போனார்.

சன்னதி அக்ரகாரம், தேரடி வீதி, திருவூடல் தெரு. கற்பக விநாயகர் கோயில் சந்திப்பு, திருமஞ்சன கோபுரத் தெரு, செங்கம் சாலை, அக்னிதீர்த்தம் வழியாக மகான் உடல் ஊர்வலம் போனது.

பின்னர் பக்தர்கள் சிலர் சமாதி அமைந்த இடத்தில் சிறு மேடை கட்டினர். அதன்மேல் லிங்கத்தை நிர்மாணித்தனர். அது முதல் சிறு அளவில் பக்தர்கள் வழிபாடானது தொடர்ந்தது. சிறிது காலஞ் சென்று அதனைக் கருவறையாக்கி வெளிப் பிரகாரம் அமைத்தனர். அதனைக் கூரை போட்டுத் தாழ்வார மாக்கினர். தினவழிபாடும் தொடர்ந்தது.

சில மகான்கள் தங்கள் உடலைக் கற்பூரமாகக் கரைத்துக் கொள்வார்கள். சில மகான்கள் தங்கள் உடலை ஜோதியில் அய்க்கியப்படுத்தும்போது எரித்து விடுவார்கள். ஆனால் நம் சாமியோ தன் உடலை பத்திரமாக தன் சமாதியிலேயே பாலும் வெண்ணெயும் கலந்த நிறத்தில் மெருகு குலையாமல் வைத்திருக்கிறார்.

## 19. இப்போது மகான் :

பொய்யுடல் மறைத்துக்கொண்டாலும் நம் சேஷாத்திரி மகான் சூட்சுமத்தில் இன்னும் வாழ்கிறார். இதற்காக தெய்வ நெறி தவறாத பக்தியில் தோய்ந்தாரைத் தொடர்பாளராகக் கொண்டு இயங்குகிறார். சேஷாத்திரி சமாதியான சில தினங் களிலேயே சூட்சுமத்தில் இயங்கினார். ஓர் ஆணைத் தொடர் பாளராகக் கொண்டு பேசினார். ஆனால் ஜனங்கள் நம்ப வில்லை. அவரைப் பயித்தியம் என்றனர். கல்லால் அடித்தனர். இதனால் இத்தகைய சக்தி தனக்கு வேண்டாம் என்று விட்டு விலகி தவநிலை ஏற்றார். பின் முக்தி அடைந்தார்.

அதன்பின் காவேரியம்மாள். பர்வதம்மாள் ஆகிய இருவர் மூலமும் சூட்சுமத்தில் இயங்கினார். அவர்கள் தற்போது முக்தி அடைந்து விட்டனர். தற்போது நம் சேஷாத்திரி மகான், திருவண்ணாமலை முன்னாள் நகராட்சித் தலைவர் திரு. ராமு முதலியார் அவர்கள் மருமகளும், வழக்கறிஞர் பக்தி பிரமுகர் திரு, ஆர்.முத்துகுமாரசாமி முதலியார் அவர்கள் துணைவியுமான பிரம்மரிஷி. இகபர சௌபாக்கியவதி அன்னை உமாதேவி அம்மையார் திருவாய்மொழியாக சூட்சுமத்தில் இயங்கிவருகிறார்

சிவனார் திருவருளோடுதான் நம் சாமி சூட்சுமத்தில் இந்த அம்மையார் மூலம் இயங்குகிறார்.

இந்த பிரம்மரிஷி இகபர சௌபாக்கியவதி அன்னை உமாதேவி அம்மையார் சிறு வயது முதலே தெய்வீக பக்தி கொண்டவர். இத்தகைய ஈடுபாடு வளர்ந்தது. பலவிதமான நோய், மனக்கஷ்டங்கள், அசௌகரியங்களால் வாழ்க்கையில் கஷ்டப்பட்டவர் என்றாலும் தெய்வீக ஈடுபாடானது குன்ற வில்லை. ஒரு முஸ்லீம் மகான் அனுக்கிரகத்தோடு பிறந்தவர் உமாதேவியார். தன் 25 ஆம் வயதில் மகான் இசக்கி சாமிகள் மூலம் உபதேசம் பெற்றார்.

உபதேசம் பெற்றபின் தொடர்ந்து 12 ஆண்டுகள் தன் இல்லத்திலேயே கடுந்தவம் இருந்தார். குடும்பத்தவர்களும் துணை நின்றனர். தவ வாழ்வில் இவ்வம்மையார் சிற்சில சமயங்களில் தெய்வ தரிசனம் காண்பார். இக்காலத்திலும் முருகப் பெருமானுடன் பேசுதல், அம்பாளுடன் பேசுதல் ஆகிய வாய்ப்புகள் கிடைத்தன. பல மகான்கள் தரிசனம் கிடைத்தது. ராமலிங்க சாமிகள், சச்சிதானந்த சாமிகள், ராகவேந்திரா சாமிகள், ஆதி சங்கரர் ஆகியோர் தரிசனத்துடன் சூட்சும ரூப பேச்சுக்களும் கிடைக்கப் பெற்றார், கடந்த 82ம் ஆண்டு முதல் மகான் ஸ்ரீ சேஷாத்திரி சாமிகளுடன் பேசி வருகிறார்.

பிரம்மரிஷி இகபர சௌபாக்கியவதி அன்னை உமாதேவி அம்மையாருக்கு, குருவருளாலும் திருவருளாலும் சூட்சுமத்தில் எங்கும் போய்வரக்கூடிய ஆற்றலும், பசி இல்லாத வரமும், பழம் பால் மட்டுமே அருந்தி உயிர் வாழக்கூடிய நிலையும் கடந்த சில ஆண்டுகளாக ஏற்பட்டுள்ளது. தற்போது மகான் சொல்வதுபோல் திருத்தொண்டு செய்து வருகிறார்.

இதுவரை சாமியுடன் சூட்சுமத்தில் பேசியவர்கள் காவேரி அம்மாள், பெங்களூர் பர்வதம்மாள், இவர்களை சேஷாத்திரி சுவாமிகளே தேர்ந்தெடுத்தார். ஆனால் மகான் சூட்சுமத்தில் இயங்கப் பயன்படுத்தும் இகபர சௌபாக்கியவதி பிரம்மரிஷி

ஞானத்தாய்உமாதேவி அம்மையாரை இறைவனே தேர்ந்தெடுத்து நம் சாமிக்கு கொடுத்தார். இது ஒரு அரிய வாய்ப்பு.

தவத்தின் உயர்ந்த நிலையில் இருக்கும் அன்னை உமாதேவியார் பக்தர்களாலும் 'அம்மா' என்றும் 'ஞானத்தாய்' என்றும் அழைக்கப்படுகிறார். நிலையில் உயர்ந்ததாலும் கலியுகம் காக்க மகான் இவரை சேஷப்பணிக்கென சுழல வைக்கிறார். இந்த ஞானத்தாயின் வரலாறு "நெருப்பில் கனிந்த கனி" என்ற பெயரில் நூல்வடிவில் வந்துள்ளது. அந்தப் பட்டமும் சச்சிதானந்த சுவாமிகள் தந்ததுதான்.

அன்னை உமாதேவியார் மனிதர்களோடு பேசுவார். மனித உள் மனங்களோடு பேசுவார். ஆவிகளோடு பேசுவார். சூட்சுமத்தில் வாழும் மகா மகான்களோடு பேசுவார். ஏன் தெய்வத்தோடும் பேசுவார். அத்தகைய சக்தி கொண்ட சக்தி இவர். இவரின் ஆன்மீக உழைப்புக் கண்டு மெச்சிய போகர் சில சிகிச்சை முறைகளையும், ராகவேந்திரர் தீய சக்திகளை விரட்டும் மந்திரங்களையும் வழங்கி உள்ளனர்.

கலி திருத்த சிவனாரின் தனிப்பட்ட உத்திரவின் பேரில் வந்தவரே சேஷாத்திரி சுவாமிகள். அதனால் தான் அவர் மற்ற மகான்களில் இருந்து வேறுபட்டு சூட்சுமத்தில் இயங்குகிறார். அதற்காக இரவு பகல் பாராமல் கலி திருத்துகிறார். அன்னை உமாதேவியார் ஆயுளை சற்றே நீட்டிக்கும் வரமும் இப்போது இவருக்குக் கிடைத்துள்ளது.

பெண் மகான்களில் இப்படி ஒருவர் தோன்றியது இல்லை என்றே எல்லா மகான்களும் வியக்கிறார்கள். வாழ்த்துகிறார்கள். ரிஷிகளுக்கு ஒப்பானவர் நம் 'அம்மா' உமாதேவி அவர்கள், பிரம்மரிஷி ஞானத்தாய் இகபர சௌபாக்யவதி அன்னை உமாதேவி அம்மையார் திருவாய் மொழியாக நம் மகான் ஸ்ரீசேஷாத்திரி சாமிகள் செய்துவரும் சித்துக்கள் ஏராளம்.

இப்போதும் சூட்சுமத்தில் இயங்கி வரும் மகான் ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள் தன்னை வெளிப்படுத்தி அம்மா மூலம்

கலி திருத்துகிறார். அதன் மூலம் அறிந்த பழைய செய்திகளும் ஏராளம். மகான் இப்போது 'அம்மா' மூலம் செய்து வரும் பெரும் அதிசயங்களில் ஒரு சிறு பகுதியாவது உலகம் அறிந்து கொள்ள வேண்டும்.

## 20. அதிசயத் தோப்பு :

எண்ணிலா அதிசயங்கள் நடைபெறும் க்ஷேத்திரமாக மகான் ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமம் திகழ்கிறது. மகானின் திருவருள் குருவருளாக நின்று நிலவுகிறது. இகபர சௌபாக்யவதி பிரம்மரிஷி ஞானத்தாய் அன்னை உமாதேவி அம்மையார் மூலமாக மகான் செய்திருப்பதில் செய்து வருவதில் கொஞ்சம்.

இந்நூலின் தொகுப்பாசிரியனான அடியேன் ஹெர்னியா நோயால் துடித்து அறுவை சிகிச்சை மேற்கொள்ளப் போன போது சாமி உத்திரவு கேட்கப்போனேன். அறுவை சிகிச்சை வேண்டாமென்று தடுத்து, 12நாள் மலை சுற்றச் செய்து, மலை சுற்றும் வழியில் மணம் வீசிட நோயைச் சுகமாக்கினார்.

திருவண்ணாமலை வழக்கறிஞர் எஸ்.ஆர். வீரராகவன் என்பவருக்கு மஞ்சள் காமாலை நோய் முற்றி ஆயுளுக்குக் கேடு விளைந்தபோது, என்ன வைத்தியம் மேற்கொள்ள வேண்டு மென்று கூறி மந்திரநீர் வழங்கி ஆயுளை வளர்த்தார். அதே போல் வழக்கறிஞர் என். விஸ்வநாதன் என்பாரின் துணைவியார் சங்கரி விஸ்வநாதன் என்பவருக்குத் தொல்லை தந்துகொண் டிருந்த முதுகு வலியை ஒரு அறை விட்டுப் பறந்தோடச் செய்தார். அவர்கள் வீட்டில் காணாமல் போன பல பொருள் களைச் சொன்னார்.

சிறந்த பக்தரான பெங்களூர் லலிதா அவர்களுக்கு நடை பெற்ற ஆபரேஷனை அன்னை உமாதேவி திருவாய் மொழியால் சொன்னபடி நம் மகான் ஆபரேஷன் தியேட்டரில் உட்கார்ந்து மேற்படி லலிதாவுடன் பேச்சுக் கொடுத்தபடியே ஆபரேஷனை

சிறப்பாக நடத்தித் தந்தார். அறுவை சிகிச்சை நடக்கும்போது பேசிக் கொண்டிருந்த லலிதாவின் நிலையைக் கண்டு அதிர்ச்சி அடைந்த மருத்துவக்குழு விஷயம் அறிந்து வியப்படைந்தது.

சூட்சுமத்தில் இயங்கும் நம் சேஷாத்திரி மகான் தன் சிஷ்யை பிரம்மரிஷி இகபர சௌபாக்கியவதி அன்னை உமா தேவி திருவாய் மொழியாக நிகழ்த்திய அதிசயம் யாதெனில் சென்னை உஷாதேவி அவர்கள் பிரசவத்திற்காக சென்னை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். எக்ஸ்ரே எடுக்கப்பட்டது. மிகவும் சிக்கலான கேஸ் என மருத்துவர்கள் கைவிட்டனர். நம்பிக்கையுடன் திருவண்ணாமலை வந்தார். அன்னை வழியாக மந்திரித்து சாமியருள் செய்தார். அறுவை சிகிச்சை இன்றி சுகப்பிரசவம் நடந்தது.

மற்றொரு சம்பவம் சேலம் பாலு இல்லத்தில் நடந்தது. அபார்ஷன் செய்தே ஆக வேண்டும். இல்லையேல் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்ற நிலையில் அபார்ஷனே தேவையில்லை எனும் நிலையை உண்டாக்கினார். இந்த நூலாசிரியனான அடியேன் சேஷாத்திரி வாழ்க்கைத் தொடர் வில்லுப்பாட்டினை எழுதத் தொடங்கினேன். அப்போது, அன்னை திருவாய் மொழியாக "நான் எழுதும் போது உன் வீட்டிற்கு வருகிறேன்" என்று மகான் சேஷாத்திரி சாமிகள் மொழிந்தார். எப்படி வருவார் எப்படி வருவார் என்ற ஏக்கம் என்னுள். சாமி திருவுருவப் படத்திலிருந்து செம்பருத்திப்பூ வீழ்ந்தது. சாமியின் திருமுகத்து ஒளிக்கற்றைகள் அடியேன் புருவ சந்திப்பில் புகுந்தது. ஆனந்தப் பிரவாகம்.

நீதித்துறையைச் சார்ந்த சேஷபக்தர் சடையப்பன் அவர்களின் உறவினர் சந்திரன் அவர்கள் வயதானவர், பார்வைக் குறைவு, மருத்துவர்களைக் கண்டார். பார்வை திரும்பாது என கைவிரித்தனர். போன பார்வை போனது தான் என புலம்பினார். பரிதவித்தார். இந்நிலையில் நீதிபதியின் மூலமாக நம் மகானின் பெருமையை அறிந்தார். தளரா நம்பிக்கையுடனும் விடாமுயற்சியுடனும் நம் சேஷாத்திரி சுவாமிகள்

திருநாமம் ஜெபித்தார். கடுந்தியானம் மேற் கொண்டார். ஓர் நாள் சாமிகள் தன் நாவினால் அவரின் கண்களைத் துழாவுதல் போன்ற உணர்வு. என்ன வியப்பு! அவர் இப்போது நன்றாகப் பார்க்கிறார்.

சூட்சுமத்தில் இன்னும். இன்றும் இயங்கிவரும் நம் சேஷாத்திரி சுவாமிகள் திருடு போனது பலவற்றைக் கண்டு பிடித்திருக்கிறார். எண்களைக் கொடுத்து தியானம் செய்து அதன் மூலம் தன் சித்தினை நிகழ்த்தி இருக்கிறார். அ. கிருஷ்ண மூர்த்தி போன்ற வியாபாரிகளைக் கைதூக்கி விட்டு வருகிறார். தன் பெயரைச் சொல்லி விடியற்காலை 3மணிக்கு ஜெபம் செய்யும் தம் பக்தர்கள் பலருக்கும் மணமாக வீசி அருள்பாலிக்கிறார்.

இந்நகரில் நம் சேஷாத்திரி மகான் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்து அவர் அருட்பெற்றுச் சிறந்து அவர்தம் அற்புதங்களை நேரில் கண்ட அடியேனின் தந்தை, 'ஏடிஎம்' அவர்களின் கால்கள் துவளாமல் திருநீர் அளித்து மகான் காத்து வருகிறார். பலருக்கும் காப்பாயிருக்கிறார்.

வைப்புக்களை அகற்றுகிறார். தோஷங்களை நீக்கு கிறார். முப்பத்தி இரண்டு வயதை விழுங்கியும் மணநாள் வாய்க் காதிருந்த பலருக்கும் மாங்கல்ய பாக்கியம் தந்து இருக்கிறார். வாழ்ந்தபோது ஒரு திருமணத்தில் மாங்கல்யத் தட்டை தூக்கி எறிந்தார். சமீபத்தில் அப்போது மணமகளாக வீற்றிருந்த அம்மையார் அதன் காரணத்தை வினவியபோது அதனால் தான் நான்கு முறை உன் கணவரை இறப்பிலிருந்து காப்பாற்றினேன் என்றார். கடந்த மூன்று ஆண்டுகளில் சுமார் இருபதுக்கும் மேற்பட்ட திருமணங்களைக் கூட்டுவித்திருக்கிறார்.

உருமு தனலட்சுமிக் கல்லூரி தமிழ்த் துணைப் பேராசிரியர் தம்பி பா. சுந்தரின் இருதய வால்வுக் கோளாற்றைச் சீர்செய்தவர் நம் சாமி. மருத்துவர்கள் வியந்து காரணம் தேடிக் களைத்தனர்.

இறைத் தொண்டாற்றும் தமிழய்யா வித்துவான் திரு. அ. பாண்டுரங்கனார் தம் நிலத் தகராறு பற்றிச் சொன்னார். நீர்த்தடம் பற்றிச் சொன்னார் நம் மகான். மந்திர உபதேசத் தாலும், திருநீறு வினியோகத்தாலும், மலைச் சுற்றச் செய்த தாலும், அதிகாலை தியானம் மேற்கொள்ள வைத்ததாலும் அரிய சித்துக்களை இன்னும் செய்கிறார். இன்றும் செய்கிறார். மலடுகள் என மனந்தேம்பிக் கிடந்தோரை மகிழ்வடையச் செய்திருக்கிறார். சித்துக்கள் தொடர்கின்றன. ஒளி படர்கிறது. அனுபவத்தைப் போன்ற படிப்பு ஏதுமில்லை.

சமயம், லௌகீகம் மட்டுமல்லாமல் அரசியலிலும் தன் தொண்டுகளை நிகழ்த்தி தெய்வீகம் வளரப் பாடுபடுகிறார். ஒரு முறை பிரபலப் பெண் கவிஞர் திருமதி சௌந்திரா கைலாசம் அவர்கள் வந்து தரிசித்தார். ஜனாதிபதி தேர்தல் நேரம். யார் ஜனாதிபதியாவார் என அவ்வம்மையார் கேட்க 'ஜெயில்சிங் கைச் சுட்டிக் காட்டினார். அது மட்டுமல்ல மாண்புமிகு தமிழக முதல்வர் தன் அமைச்சரவையை விரிவு படுத்தப் போவதாகச் சொல்லி இருந்த நேரம்.

## 21 தொடரும் தொடுகை :

இன்றும் இன்னும் நம் சேஷாத்திரி சுவாமிகள் இகபர சௌபாக்யவதி பிரம்மரிஷி ஞானத்தாய் உமாதேவி அம்மையார் வழி நிகழ்த்தி வருகின்ற அதிசயங்களுக்கு சில, இன்னும் சில எடுத்துக் காட்டுகள்.

பெங்களூர் பூதலிங்கம் திருவண்ணாமலை மணிமாறன் குழுவினர் ஞானத்தந்தையார் தலைமையில் ஒரு நாள் இரவு அகால நேரத்தில் மலை சுற்றப் போனார்கள். கும்மிருட்டு. கூடவே பயம். இப்போது மலை சுற்றும் பாதையில் எரிகின்ற விளக்குகள் அப்போது போடப்பட வில்லை. பயத்துக்கு ஏற்றார் போல் இரண்டு ரௌடிகள் கூடவே இவர்களைப் பின் தொடர்ந் தனர். பெண்கள் பயந்தனர். அப்போது திடீரென்று சென்ட் மணம். பச்சைத் துண்டால் முண்டாசு கட்டிக் கையில் கம்பு

வைத்தபடி ஒரு சிவந்த உருவம் இவர்களைக் கடந்தது. அதைக் கண்ட உடனேயே உடன் வந்த ரௌடிகள் ஓடி விட்டனர். இவர்கள் ஆச்சரியத்தோடு திரும்பிப் பார்த்த போது தங்கள் முன்னால் போய்க்கொண்டிருந்த பச்சை முண்டாசு கட்டிய உருவத்தைக் காணவில்லை, அப்போது தான் இவர்கள் வந்தது சாமி என்று உணர்ந்தார்கள்.

சென்னையில் பணிபுரியும் பி. கார்த்தி என்பவர் ஒரு நாள் தியான மண்டபத்தில் தியானம் செய்து கொண்டிருந்தார். மனம் சலனப்பட்டுக் கொண்டிருந்தது. ஒரு முகப்படவில்லை. அப்போது அமைதியைக் கிழித்துக் கொண்டு பட்டென்று ஒரு சப்தம். யாரோ மிக அருகில் கையைத் தட்டினது போல இருந்தது. உடனே கண்விழித்துப் பார்த்தார் கார்த்தி. ஒருவரு மில்லை. வெளியில் வந்தார். ஆசிரமப் பணியில் சிறக்கும் அச்சுதன் சாமியிடம் யார் கையைத் தட்டியது எனக் கேட்டார். அவரோ "உள்ளே இருந்துதானே சத்தம் வந்தது. நீங்கள் தட்ட வில்லையா?" எனக் கேட்டார். பிறகுதான் புரிந்தது தன்னை ஒருமுகப்படுத்துவதற்காக சேஷாத்திரி சுவாமிகளே ஓசை எழுப்பினார் என்பது.

திருச்சி பா. சுந்தர் மற்றும் சேஷ பக்தர்கள் 85ஆம் ஆண்டு பொங்கல் நாளில் மலை சுற்றப் போயினர். அவர்கட்கு நம் சாமி முன்கூட்டிச் சொன்னபடியே மலையில் லிங்கம் பிம்பம் ஜோதி மூன்றையும் காட்டி காட்சிதந்தார்.

அனந்தராம சேஷன் என்றொரு சேஷபக்தரும் அவரது துணைவியும் ஒரு முறை விமானத்தில் பயணமானார்கள். நம் ஆசிரமத்தின் கர்மயோகி ஆர். முத்துக்குமாரசாமியிடம் பயணத் துக்குமுன் சாமியின் படத்தை வாங்கி தம் சூட்கேஸில் வைத்து தான் பயணமானார்கள். அவர்கள் சென்ற விமானம் விபத்துக் குள்ளானது. ஆனால் சாமியருளால் அனந்தராம சேஷனும் அவர் துணைவியும் அடிபடாமல் தப்பித்தார்கள்.

திருவண்ணாமலை வழக்கறிஞர் எஸ்.ஆர். வீரராகவனின் சிறிய மைத்துனர் ஒருவர் ஒரிஸ்ஸாவில் வங்கி அதிகாரி பயிற்சி

பெற்றார். ஒரு நாள் தங்கியிருந்த அறைக்கு வெகு தொலைவில் மர்மமாக அடிபட்டு இறந்து கிடந்தார். இது பற்றி ஞானத் தாய் இகபர சௌபாக்கியவதி உமாதேவியார் வழியாக நம் சாமி களை மேற்படி வீரராகவன் கேட்டார். தனக்குத் தேவையில் லாத வங்கி ஊழல் ஒன்றை நண்பர்களின் தூண்டுதலின் பேரில் ஆராய்ந்திருக்கிறார், அந்த வங்கி அதிகாரி. யார் குற்றவாளி என்பதையும் கண்டுபிடித்து விட்டார் அவர். இதை அறிந்த குற்ற வாளிகள் இவரை ஒரு பெண் மூலம் அழைத்து மயக்கமூட்டினர். இரும்புத் தடியால் அடித்துச் சாகடித்தனர். இதைச் சொல்லி இன்னும் கொஞ்சம் நாளில் இந்த வங்கி ஊழல் அம்பலமாகி ஆங்கிலப் பத்திரிக்கையில் வெளிவரும் என்றார் சேஷாத்திரி சுவாமிகள். அதன்படி சிறிது காலத்தில் அந்தக் குறிப்பிட்ட வங்கி ஊழல் வெளியானது.

பெங்களூர் திருமதி சுகந்தி என்பவருக்கு இன்னும் மூன்று தினங்களில் கருத்தரிக்கும் என சாமி சொன்னதன் படியே நிகழ்ந்து அவரும் சாமியின் பெயர் சொல்லி வருகின்றார்.

திருவண்ணாமலை கன்னிகாபரமேஸ்வரி பள்ளித் தலைமை ஆசிரியர் ப. சந்திரசேகரன் சிறுநீரகத்தில் கல் அடைப்பு நோயால் அவதிப்பட்டார். எந்தப் பகுதியில் கல் தோன்றி உள்ளது எனக் கூறி எலுமிச்சம்பழத்தை மந்திரித்து காலை வெறும் வயிற்றில் எலுமிச்சம் பழத்தையும் சுவாமி தந்த திருநீற்றையும் கலந்த நீரை அருந்தச் சொன்னார். சுவாமி சொன்னபடியே பத்தியமாக அரிசிச் சோற்றை நீக்கினார். கோதுமை உணவு கொண்டார் என்ன ஆச்சரியம்! ஒரு ஜலபாரிப்பொழுதில் கல் வெளியேறியது.

மகான் சேஷாத்திரி சுவாமிகள் அனைவராலும் அம்மா என்று அழைக்கப்படும் இகபர சௌபாக்யவதி பிரம்மரிஷி ஞானத் தாய் உமாதேவி அம்மையாரின் திருவாய் மொழியாக ஏராளமான பழைய செய்திகளையும் தன் வாழ்நாளில் நிகழ்த்திய சித்துக்களையும் சொல்லுவார். கேள்வி ஞானம், பழைய கானம் என்ற தலைப்பில் உள்ள செய்திகளும் அவ்வாறு கிடைத்ததுதான்.

திரைப்படப் பிரபல பின்னணிப் பாடகர் மலேசியா வாசு தேவன் ஒருமுறை வந்திருந்தார். அவர் மிகுபுகழ் பெறுவார் என்றும் நடிப்புத் துறையிலும் அவர்புகுந்து பல படங்களில் நடித்துப் பெயரெடுப்பார் என்றும் அதிலும் பரபரப்புடன் பேசப் படுவார் என்றும் சாமி ஆசி கூறினார். அப்போது மலேசியா வாசு தேவன் திரைப்படங்களில் நடிக்கத் தொடங்கவில்லை. அவர் திரைப்படங்களில் தொடர்ந்து நடிப்பதையும், அவர் குரல் வானொலியில் பலமுறை தினசரி ஒலிப்பதையும், திரைப்பட ரசிகர்கள் அறிவார்கள்.

சுனில் குமார் சிறந்த பக்தர். சிறுவயதாக இருந்தாலும் பூர்வ புண்ணிய பயனால் சேஷ பக்தரானவர். சாமி புகழைப் பரப்புபவர். இவர் இப்போது டில்லியில் உள்ளார். சென்னையில் சுனில்குமார் இருந்தபோது கோடம்பாக்கம் ஹைரோடில் ஸ்கூட்டர் ஓட்டிக்கொண்டு போனார். திடீரென்று இஞ்சின் கோளாறு ஏற்பட்டு எதிர் வண்டிகளோடு மோதி விபத்து ஏற்படும் நிலை. ஏற்கனவே இவ்விதம் நிகழுமென்று நம் சேஷாத்திரி சாமி சொல்லியிருந்தார். எனவே சட்டென்று சாமி பெயர் சொல்லி வணங்கி கையைக் காட்டி கண் இமைக்கும் நேரத்தில் வண்டியை ஓரங்கட்டித் தப்பித்தார் சுனில்.

பெங்களூர் ஆர். பூதலிங்கம் மிகச் சிறந்த சேஷபக்தர். அவர் குடும்பத்தில் காலங்காலமாக தினசரி சித்து விளையாடி வருகிறார் நம் சாமி. அவர் சேஷாத்திரி சாமி அருளோடு ஒரு வீடு கட்டினார். பெயர் அருண நிவாஸ். காலி இடத்தை வாங்கி மூன்றரை அடி ஆழக் கடக்கால் போட்டு வீடு கட்டினார். சில ஆண்டுகட்குப் பின்னால் மேல்மாடி கட்டவிரும்பி சாமி ஆசி கோரினார். சாமியே, "ஏற்கனவே போட்ட அடித்தளம் ஆழம் போதாது" என்றார். என்றாலும் தன் பெயர் சொல்லி மேல் மாடிக் கட்டச் சென்னார். அப்படியே பூதலிங்கம் கட்டினார். பின் பல மாதங்களுக்குப் பின் ஓவர்ஹெட்டேங்க் கட்ட முயன்றார். கட்டிட வல்லுனர்கள் கடக்கால் ஆழத்தைப் பார்த்த பின்னரே மாடிமேல் டேங்க் கட்டவேண்டும் என்றனர். அதற்காக ஒரு

ஓரத்தில் கடக்காலை யொட்டி ஆட்களால் தோண்டப்பட்டது. வியப்போ வியப்பு, மூன்றரை அடி ஆழமே தோண்டி அடித்தளம் இடப்பட்டிருந்த அதன் கடக்கால் மூன்றரை, நான்கு,நான்கரை, அய்ந்து, அய்ந்தரை, ஆறு, என ஆறடி ஆழக் கடக்காலாக வியாபித்திருந்தது.

சென்னை ஜெயலட்சுமி அமையார் ஒருமுறை சாமியின் சூட்சும உத்திரவுப்படி மலை சுற்றினார். அவருடன் அவர் கணவர் மற்றும் இருபெண்கள், தம்பி சுந்தர், செல்வன் லாயர் சந்திரமோகன் இன்னும் சேஷ பக்தர்களும் அவருடன் மலை சுற்றினர். அதிர்ஷடவசமாக சேஷாத்திரி ஆஸ்ரம செயலர் கர்ம யோகி 'ஆர்எம்' அவர்கள் அவர்களை வழிநடத்திச் சென்றார். சோனை நதி தாண்டின அவர்கள், கிருஷ்ணர் கோயிலுக்கு எதிரே ஏதோகாலில் கடித்தது. வீலென்று அலறினார் ஜெய லட்சுமி. பக்கத்தில் வந்தவர்கள் அஞ்சினர். அந்த இடத்தில் இடப்புறம் பூஜிக்கப்பட்டு வளர்ந்து வரும் பாம்புப் புற்று வேறு. கேட்கவா வேண்டும், பயத்துக்கு. உடனே 'சேஷகவி' சுவாமியின் விபூதியைப் பூசினார். 'ஆர்எம்' அய்யா அவர்கள் சேஷ மந்திரம் ஓதி அணியடித்து தரையில் உபாதையை இறக்கினார். வலியாலும் பயத்தாலும் துடித்துக்கொண்டிருந்த சென்னை ஜெயலட்சுமி அம்மையார் உடனே குணமாகி-மலை சுற்றி முடித் தார். பிறகுதான் மலை சுற்றும் வழியில் மலைபோல் வந்த ஆபத்து மலை சுற்றியதால் பிணிபோல் நீங்கியது என அறிந்தார்.

நீதித்துறையில் உயர் பொறுப்பிலிருக்கும் வி. சடையப்பன் அவர்கள் திருவண்ணாமலையில் சப்ஜெட்ஜாக இருந்தார். அவருக்கு சர்க்கரை வியாதி ஏற்பட்டது.அன்னை உமாதேவியிடம் தன் குறையை முறையிட்டார். சேஷாத்திரி சாமி பச்சிலை வைத்தியம் சொன்னார். பற்றி நடந்தார் சடையப்பன். பறந்தது சர்க்கரை நோய். இந்த வைத்திய முறை 'மகான் சேஷாத்திரி மாத இதழிலும் வெளிவந்தது. அம்முறையினைப் பின்பற்றி' நடந்தவர்களின் வியாதி பறந்தது.

நாக்பூர் வானொலி நிலைய இயக்குனரின் துணைவியார் திருமதி குமாருக்கு இருந்த மூட்டு வலியை நீக்க திருநீறு கொடுத்தார். பயபக்தியும் நம்பிக்கையும் நிறைந்த அந்த சேஷ குடும்பம் தெய்வீகத் திருநீற்றுக்குப் பணிந்தது. நோயும் அந்த அம்மையார் உடலைவிட்டுப் பிரிந்தது.

பாண்டிச்சேரி வானொலி நிலைய இயக்குனர் வி. சந்திர மௌலி அவர்களின் பயணத்தை பலமுறை தடுத்தவர் நம் சாமி. பின் ஒரு பயணத்தின்போது நடந்த விபத்தில் அவரையும் சேஷ பக்தையான அவரது துணைவியாரையும் அதிசயிக்கும்படி காத்தார்.

திருவண்ணாமலையைச் சேர்ந்த தேன்மொழி என்ற சிறுமி தன் பெற்றோருடன் ஒரு வீட்டில் வசித்து வந்தாள். அவள் குடியிருந்த வீட்டில் ஏற்கனவே ஒரு ஆண் தற்கொலை செய்துகொண்டான். அவனுடைய ஆவி தேன்மொழியை ஆட்டிப்படைத்தது. சேஷாத்திரி சுவாமி அந்தத் தீய ஆவி சகவாசத்தை நீக்கி அருளினார்.

உமாபதி என்பவர் செய்வினையால் இறந்துபோனார். அவரும், அவர் மாமனார் அமரர் சாது. நாராயணசாமி பிள்ளையும் சேஷ பக்தர்கள். அவர் வீட்டில் உமாபதியின் ஆன்மா சாந்தி பெறாதவகையில் தீய ஆவிகள் அலைந்தன. எப்போதோ இறந்துபோன உமாபதியின் அண்ணன் உருவம் சிமெண்ட் தரையில் தெரிந்தது. இத்தகைய சக்திகளை மேற்கண்ட வீட்டிலிருந்து விரட்டினார் சேஷாத்திரி.

துரை. ஆறுமுகம் என்ற ஆசிரியர் தம் தீராத வயிற்று வலியை நீக்கினார். 'கலாராணி' என்னும் பெண் பள்ளிக்கூட மாணவியாய் இருந்தபோது அடிக்கடி மயக்கம் வரும். நம் சாமி அது மூளை ரத்தக்குழாயில் ஏற்பட்ட அடைப்பு எனச்சொல்லி திருநீறு மந்திரித்துக் கொடுத்துக் குணமாக்கினார்.

ராஜசேகர் என்பவருக்கு மஞ்சள் காமாலை முற்றி வாந்தி எடுக்கும் நிலை வந்தது. எவரும் நம்பிக்கைப்படவில்லை.

இறந்துவிடுவார் என்றே கருதினர். ஒரு சேஷ பக்தை தாய்முன் இந்தச் சோகத்தைக் கொண்டுபோனார். அன்னை உமாதேவி சூட்சுமத்தில் வந்து வேப்பிலையால் மந்தரித்தார். ராஜசேகரின் இளம் மனைவி நம் சாமி உத்திரவுப்படி நான்கு நாட்கள் பட்டப் பகலில் மலை சுற்றினாள். தேறாது எனக் கைவிடப்பட்ட ராஜசேகர் தெளிந்தார். தேறினார். இப்போது நடமாடும் சாட்சியானார்.

முசிறி சங்கரன் என்ற பக்தர் திருவண்ணாமலை வந்து தொழுதவுடன் வேலை கிடைத்தது. இப்போது தினசரி அருளில் தோய்ந்து 'சேஷசிசு'வாகிவிட்டார். குடித்துக்கொண்டிருந்த எத்தனையோ பக்தர்களைத் திருத்தியுள்ளார் நம் சாமி. உமாசோமசுந்தரம் என்ற திருச்சி பக்தைக்கு "ஈஸ்னோபிலியா" நோய் நீக்கினார். வாண வேடிக்கைத் தயாரிப்பாளர் ஆறுமுகம் என்பவரின் ஹார்ட் ஹட்டாக்கைத் தடை செய்தார்.

ராணி பத்மநாபன் என்ற சேஷபக்தையின் அமெரிக்க வீடு விவகாரத்தில் சாமி அனுக்கிரகம் செய்து பலத்த நஷ்டத்திலிருந்து மீட்டுத் தந்தார்.

85, தீபாவளியின்போது இது நடந்தது. நம் அன்னை உமாதேவி அப்போது சென்னையில் இருந்தார். தீபாவளி அதிகாலை அவர்முன் தோன்றி வழக்கம்போல் வாழ்த்தினார். பிரவாகம்—பிரவாகம் எனச் சொல்லி மறைந்தார். இரவு வந்தது. எல்லோரும் மாடியில் தூங்கினர். அன்னை உமாதேவியார் கீழ் ஹாலில் சோபாவில் தியானத்திலிருந்தார். தவறுதலாக கைக்கீழே பட்டபோது தண்ணீரில் விழுந்தது. கண் திறந்தால் அறை எங்கும் வெள்ளம். அனைவரும் ஓடி வந்தனர். அப்போது சாமி ஒன்றரை மணி நேரத்தில் வெள்ளம் நிற்கும் என மொழிந்தார். அப்படியே நிகழ்ந்தது. அதிசயம் சென்னையிலும் படர்ந்தது.

கனடா நாட்டு விமான விபத்தில் முன்னூறுக்கும் மேற்பட்டவர் இறந்தனர். வெடிகுண்டு விபத்து எனச் சொன்னது

செய்திகள். ஆனால் அது வெடிகுண்டு விபத்து அல்ல எனச் சொன்னது நம் சாமிதான். இதை மேலை நாட்டு ஆங்கில பத்திரிக்கைகளும் ஊர்ஜிதம் செய்தன.

மலைசுற்றும் வழியில் திரிமூர்த்தி தரிசனம் அருகில் நம் சேஷாத்திரி சாமி உட்கார்ந்து தியானம் செய்த இடத்தைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று தன் ஆத்மார்ந்த சீடர்களைப் பணித்தார். அதையொட்டி 'ஆர்எம்' அய்யா வழிநடத்த சேஷ சீடர்கள் பலரும் சென்றனர். ஒரு மணி நேரத்திற்கு மேலாக சேஷநாமம் ஜெபித்தபடி அந்தக்குழு அலைந்து திரிந்தது. இறுதியில் மூலிகை வாசனையாகவும், காட்டு அணில் ரூபத்திலும், சுவர்க்கோழி ஒலியாலும் அந்த இடத்தைக் காட்டினார். இப்போதும் அந்த இடத்தில் சேஷபக்தர்கள் சூடம் ஏற்றி விழுந்து வணங்கி தியானித்துச் செல்கின்றனர்.

## 22. இன்னும் கொஞ்சம் :

மறைந்த தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் '87 டிசம்பர் 31க்கு மேல் உலக வாழ்வில் நீடிக்க வாய்ப்பில்லை என்பது ஏற்கனவே சேஷாத்ரி மகானால் சொல்லப்பட்டது. அரசியலுக்கு அஞ்சி இதை நாங்கள் வெளிப்படுத்தவில்லை என்றாலும் சேஷ பக்தர்கள் சிலர் அறிந்திருந்தனர். ஏற்கனவே சிலமுறை புரட்சித் தலைவர் உயிரைக் காத்தவர் நம் சாமிகள்.

செயற்கை கோள்கள் யுகம் இது. ஏவு கணைகள் ஏவு கடலிலேயே கலந்துவிடுகின்றன. ஏவுகணைகளின் ஆயுள் நொடிகளால் மட்டுமே கணக்கிடப்படுகிறது. சில ஆண்டு களுக்கு முன் சாமியின் ஆராதனை விழா, அதற்கு வழக்கம் போல் 'அம்மா' வந்தார். அம்மா மூலம் நம் சேஷாத்திரி சுவாமிகள் உலகத்திற்கு அருள் வாக்கு தந்தார். அப்போது "செயற்கை கோள்கள் தோல்வி அடையும்" என்றார். "விஞ்ஞானத்தால் நான் எதையும் சாதிப்பேன் என்ற எண்ணம் வேண்டாம்" என்றார். இதில் இன்னொரு அற்புதம் நடந்தது. 'அம்மா' பேசும் போது ஆண் குரலாக வந்தது.

பாண்டிச்சேரி தொழிலதிபர் ராமகிருஷ்ணனுக்கு சேஷாத்திரி சுவாமிகள் உருவமாகவே காட்சி கொடுத்தார். வழக்கம் போல் ஊரிலிருந்து வந்து மலை சுற்றப் போனார். பையில் வாழைப்பழம் வைத்திருந்தார். மலை சுற்றும் வழியில் ஆஞ்சநேயர் கோயில் உள்ளது. இப்போது அது சௌந்தர்யம் பூண்டு வருகிறது. அதை வழிபட்டுக்கொண்டிருந்தார் இராமகிருஷ்ணன். அப்போது ஒரு குரல் "ராமகிருஷ்ணன்" என்றது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். தொழவேண்டிய பழமாக ஒரு பெரியவர் வயிற்றைக் காட்டி பழம் கொடு என்றார். ஆச்சரியத்தோடு பழத்தைப் பையிலிருந்து எடுத்துக்கொடுத்தார்.

மலையைக் காட்டிச் சிலவற்றை மொழிந்து வழியனுப்பினார் முதியவர். தொடர்ந்து மலை சுற்றப்போனார் இராமகிருஷ்ணன். திடீர் என நின்றார். தன் பெயர் அவருக்கு எப்படித் தெரியும். வாழைப்பழம் வைத்திருந்தது எப்படித் தெரிந்தது. இப்படி கேள்விகளோடு மலை சுற்றி முடித்தார். பின் அம்மாவைச் சந்தித்தபோது அது சாமிதான் என உறுதி செய்தார். உடன் வந்தவருக்கு மகா ஆச்சர்யம். இந்தத் தொழிலதிபர் இராமகிருஷ்ணனை ஆஸ்ரமத்திற்கு அறிமுகப் படுத்தியவர் வானொலி நிலைய இயக்குநர் பி. ஆர். குமார். அவருக்கும் அவர் நண்பருக்கும் அதே இடத்தில் அதேபோல காட்சிக் கொடுத்தார் நம் சாமி என்பது குறிப்பிடத்தக்க விஷயம்.

இதில் பழம் வாங்கியது பக்தரின் கர்மாவை சாமி வாங்கிக் கொண்டதைக் குறிக்கிறது. மலையைப் பார்த்துச் சொன்னது. உன் கர்மாவை உனக்காக நானே சிவார்ப்பணம் செய்து விட்டேன் என்று பொருளாகும். இப்போது எல்லாம் நம் சேஷாத்திரி சாமி இவருக்கு உருவமாகவும் காட்சி தரத் தொடங்கி உள்ளார். ஆஸ்ரமத்திலும் உருவத்தோடு காட்சி தரப் போவதாகச் சொல்லி உள்ளார்.

ஒருநாள் திடீரென்று சதர்ன் ரயில்வேயில் பெரிய ஆக்சிடெண்ட் நடக்கப் போகிறதென்று சாமி சொன்னார். சேதம் குறையவேண்டும் என்று வேண்டிக்கொண்டோம்.

வருவது வரட்டும் என்று முடிவெடுத்தோம். ஆஸ்ரமத்தின் மாத இதழ் "மகான் ஸ்ரீ சேஷாத்திரி" '86 கார்த்திகை இதழில் சதர்ன்ஸ் இரயில்வேயில் பெரிய ஆக்ஸிடெண்ட் நடக்கப் போகிறது என்று செய்தி போட்டோம்.

சாமி சொன்னபடி நடந்தது. விபத்து நடக்கும்போதே அதை அம்மாவுக்குக் காட்டினார் நம் சாமி. கோர வடிவில் ரயில் பெட்டிகள் மற்றும் மனித உடல்கள் தெரிந்தன. சேஷ பக்தர்கள் வேண்டுதல்படி சேதம் ஓரளவு குறைக்கப்பட்டது. அந்த விபத்து தான் '87 மார்ச்சில் நடந்த திருச்சி மருதையாற்றுப் பால இரயில் விபத்து.

மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் இராமராஜன் அவர்களுக்கு அழகிய புத்திரன். மழலை பொழியவில்லையே அவன் என ஏங்கினர் திரு. இராமராஜனும், திருமதி. இராமராஜனும். சாமியைத் தேடி வந்தனர். அம்மாவை தரிசித்தபோதே சில மழலைகளைச் சிந்தியது பிள்ளை. இப்போது வார்த்தைப் பிரவாகம் அந்தப் பிள்ளைக்கு. அப்பாவைப்போல உயர்ந்த பதவிக்கு வருவானென்றும் வாழ்த்தினார் மகான். துத்திக்குளம் பாஸ்கரன் மகன் தத்தாத்ரிக்கு மூளை வளர்ச்சிக் குறைவாய் இருந்தது. கார்த்திகைத் திருவிழா பார்க்க வந்தவர் ஆஸ்ரமம் வந்தார். அம்மாவை தரிசித்தார். சாமி சொன்னபடி சாமியின் அருளால் புத்திசாலி ஆகி வருகிறான் தத்தாத்ரி.

முன்னாள் பாரதப் பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் மறைந்த சில நொடிகளில் அம்மாவின் தரிசனத்திற்காக வந்து வணங்கி சிலவற்றைச் சொல்லிச் சென்றார். இதை 'அம்மா' அருகிலிருந்தவர்களுக்குச் சொன்னபோது வானொலியில் எந்தச் சேதியும் வரவில்லை. காலதாமதமாகவே சொல்லப் பட்டது.

"அணு ஆயுதங்களால் பெரும்சேதம் ஏற்படப் போகிறது. அவ்வாறு ஏற்படாமல் தடுக்க நாங்கள் யாகங்கள் செய்து

கொண்டு இருக்கிறோம். அதன் பயனாக உலகில் ஒரு சமாதான ஒப்பந்தம் ஏற்படும். அதனால் ஓரளவுக்குப் பயன் ஏற்படும்'' என்று கூறினார் நம் சாமி. அதற்குப்பின்தான் அமெரிக்கா, ரஷ்யா சார்பில் ரீகனும் கோர்ப்பச்சேவ் இருவரும் கையொப்பமிட்டனர்.

என் மகள் சுஜாதா. சாவின் வாசல் வரை சென்றுவிட்டாள் காய்ச்சல்தான் காரணம். அம்மாவின் காலடியில் போட்டோம். சாமியிடம் கையேந்தினோம். அழைத்துச் செல்ல எமதூதர்கள் வந்துவிட்டதை இகபர சௌபாக்யவதி உமாதேவி அம்மையாரே நேரில் கண்டார். கைபிசைந்து சாமியை வேண்டினார் அந்நிலையில் சாமி, "வேறு பெரிய டாக்டர் யாராவது பாருங்கள்'' என்றார். உடனே "சேஷாத்ரி சாமிதான் பெரிய டாக்டர். நீங்களே பாருங்கள்'' என்றேன். முருகப்பெருமான், அண்ணாமலையார், அம்பாளை வேண்டி சுஜாதாவைக் காப்பாற்றினார். சோதனையில் விடாப்பிடியாக நின்று ஜெயித்தாய் என்று என்னையும் பாராட்டினார்.

பாண்டிச்சேரி காவல்துறை ஊர்தி ஓட்டுனரின் மகள். புதுவை தளிஞ்சை காளி பக்தை. பிரம்மராட்சசம் பிடித்திருந்தது. பூஜைகளால் அதைக் கட்டுப்படுத்திப் பக்தி வழியில் செல்ல அவர்களுக்கு பணமும், ஆச்சாரமும் இல்லை. 'அம்மாவிடம் சேஷாத்திரி 'சுவாமிகளைப் பார்'' என பாண்டிச்சேரி கன்னிகாபரமேஸ்வரி கோயிலில் சாமி வந்து ஆடிய ஒரு பெண் சொன்னார். அதனால் திருவண்ணாமலை வந்து சேஷாத்திரி சுவாமிகள் அனுக்கிரகத்தால் குணமானார். மணமானார்.

ஒவ்வொரு நாளும் இத்தகைய அருள்விளையாடல்களை மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் நிகழ்த்திக்கொண்டே இருக்கிறார். சேஷ பக்தர்கள், சேஷ குடும்பத்தவர்களின் சேஷ கோத்திரம் வளர்ந்துகொண்டே இருக்கிறது.

## 23. பொருள் புதிது :

தன் பக்தர்களுக்கு எப்போதும் துணை நிற்கும் விசால கிருபா கடாட்சம் கொண்டவர் நம் மகான் என்பது இதுவரை இந்த வரலாற்றைப் படித்து வந்த தாங்கள் அறிந்ததே.

திருச்சி பேராசிரியர் சேஷ சீடர் பா. சுந்தர் தன் திருமண நிச்சயம் முடிந்து வந்து அம்மாவை தரிசித்தார். அப்பொழுது அம்மா வழியாக சேஷாத்ரி மகான் "எல்லா நேரங்களிலும் என்னை நினைத்துக்கொண்டே இருந்தாய் மகிழ்ச்சி. ஆனால் சாப்பாட்டு வேளையில் என்னை மறந்து விட்டாயே"? என கேலி செய்தார்.

ஆச்சரிய விழிகள் கண் கண்ணாடிகளில் இருந்து பளிச்சென்று வெளிப்பட, தலை கவிழ்ந்து 'ஆமாம்' என்று அச்சாரம் போட்டார் பேராசிரியர் பா. சுந்தர்.

திருவண்ணாமலையில் ஜீவ சமாதியான தெய்வசிகாமணி பரமாச்சாரிய சுவாமிகள் திருக்கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றபோது ஒரு பழங்கால கல்வெட்டு கிடைத்தது. அதுபற்றி அம்மாவிடம் கேட்டபோது இன்னும் கல்வெட்டுக்கள் கிடைக்கும் என்றார் சேஷாத்ரி சுவாமிகள். அதுபோலவே கிடைத்தது.

சேஷ குடும்பத்து செல்வ புத்திரர்கள் ராஜராஜன்-சுந்தரி தம்பதியினருக்கு ஆண் மகவு மலர்ந்தது. அந்தக் குழந்தை பிறக்கும் நேரம் நட்சத்திரம் முதலானவை 'அம்மா'வால் முன்கூட்டியே சொல்லப்பட்டது. சேஷ வார்த்தைப்படியே அறுவை சிகிச்சைக்குப்பின் அருண் கமல் உதயம்.

இந்தக் குழந்தை 'அம்மா-அய்யா'வின் பேரக் குழந்தை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தக் குழந்தையின் ஜனனம் குறித்து பேசிக்கொண்டு இருக்கும்போது ஒரு தெய்வீக ரகசியத்தை வெளியிட்டு அருளினார் சேஷாத்ரி மகான்.

அதாவது 'தலையெழுத்து' என்று நாமெல்லாம் நம்புகின்றோமே அந்த விதியெழுத்து ஒவ்வொரு குழந்தையின் பிறப்புக்கும் ஆறு மணி நேரத்துக்கு முன்னால்தான் நிர்ணயிக்கப்படுகிறது.

குழந்தை பிறக்கவேண்டிய நேரத்துக்கு முன்னாலேயே சில நேரங்களில் அறுவை சிகிச்சை செய்து குழந்தையை வெளியே எடுக்கிறார்களே அப்போது எப்படி தலையெழுத்து நிர்ணயிக்கப்படுகிறது என்ற சந்தேகக் கேள்வி எழுகிறது அல்லவா?

அதற்கும் சேஷாத்ரி சுவாமிகள் பதில் மொழிந்தார். இந்தக் குழந்தை பிறக்க வேண்டிய நேரத்துக்கு இத்தனை மணி நேரத்திற்கு முன்போ அல்லது பின்போ இயல்புக்கு மாறாக இந்தக் குழந்தை ஜனிக்கும் எனப் பதிவாகி விடுமாம்.

ஆக எந்த முறையில் குழந்தை ஜனித்தாலும் அந்த ஜனனம் இறைவன் ஆணைப்படிதான். முறை நம்முடையதாக நாம் நினைத்துக்கொள்ளலாம். ஆனால் முறையும் நேரமும் அவன் கையில்தான். "ஆறு மணி நேரத்திற்கு முன் தலையெழுத்து நிர்ணயம்" என்ற தேவ ரகசியம் நம் சேஷ மகானால் வெளிப்படுத்தப்பட்டது.

பாவ புண்ணியம் என்று நாமெல்லாம் சொல்லுகிறோம் அல்லவா? அந்தப் பாவ புண்ணியம் எந்த வகையில் கணக்கிடப் படுகிறது என்பதைக் குறித்து அம்மா மூலம் சூட்சுமத்தில் விளக்கினார் சேஷ மகான்.

அதாவது ஒவ்வொரு மனிதனின் உடலைச் சுற்றிலும் ஒரு ஒளிவட்டம் இருந்துகொண்டே இருக்கிறது. மனிதனின் செயல்கள் அனைத்தும் இந்த ஒளி வட்டத்தின் மூலமாகவே மேலுலகில் பதிவாகி பாவ புண்ணிய கணக்குகளாகப் பதிவாகின்றன.

தூல உடலின் இறப்புக்குப்பின் இந்தப் பதிவுகளின்படியே இன்ப துன்பம், தண்டனை, பாவ லோகம், புண்ணிய லோகம், பணிகள், மறு பிறவி ஆகியவை நிச்சயிக்கப்படுகிறது என்றார்.

சேஷாத்ரி சுவாமிகள் பெருங்கருணையால் இப்பொழு-தெல்லாம் சேஷ நாத ரூபினி அன்னை உமாதேவி அம்மையார் சேஷ பக்தர்களின் தூக்கத்தின்போது 'சொப்பன பிரவேசம்' செய்து வருகிறார். இதன்படி அடிக்கடி சொப்பன தரிசனம் காணும் பாக்கியம் கைவரப் பெற்றவர் நாக்பூர் வானொலி நிலைய இயக்குனர் சேஷமணி பி. ஆர். குமார் அவர்கள்.

காலங் கடந்தும் திருமணமாகாத பெண்கள் பிரச்சினை என்பது இன்று தேசப் பிரச்சினையாகவே விஸ்வரூபமெடுத்து விட்டது. வறுமை, வரதட்சணை, அழகின்மை என்பவற்றால் திருமணம் தாமதமாவது மிகக் குறைந்த சதவிகிதம்தான். பலத்த காரணங்கள் செவ்வாய் தோஷம், நாகதோஷம் முதலானவைகள்தான்.

செவ்வாய் தோஷம் நாக தோஷம் நீக்கி நலம் புரிதல் நம் மகானின் பெரும்பான்மை அருள் விளையாடலாக இருந்து வருகிறது. மகானின் அனுக்கிரகத்தை சேஷநாத ரூபினி அம்மா வழியாக கிடைக்கப்பெற்று மாங்கல்யம் பெற்றவர்கள் பட்டியல் மிக நீண்டதே. மீண்டும் இதைக் குறிப்பிடக் காரணமும் அதுதான்.

இருதய நோய் அறுவை சிகிச்சை செய்து பார்க்கலாம் என்று இழுத்தபடியே டாக்டர்கள் கூற்று. வசதியான பெரியவர். பெங்களூர்க்காரர். ராதாகிருஷ்ணன் அவர் நாமதேயம். ஹோமப்பிரியா சூரியநாராயணன் வழியாக அம்மாவிடம் வந்து சேஷ கடாட்சம் வேண்டி நின்றார்.

சேஷ நாத ரூபினி வழியாக சேஷன் காட்டிய வழியில் ஆஸ்ரமத்தில் தியான மண்டபத்தில் ஆயிஷ்ய ஹோமம்

நடந்தது. ஹோமத்தால் ஆயுளைக் கூட்ட முடியுமா எனச் சிலர்மேல் சந்தேக நோய். மறு பரிசோதனை செய்த மருத்துவர்களுக்கு மகா பெரிய ஆச்சரியம். இப்படியும் சேஷ மகானின் அனுக்கிரகம் தொடர்கிறது.

வளைகுடாப் பிரச்சினையின் காரணமாக பீதிக்குள்ளாகி குவைத், சௌதி, பக்ரைன் போன்ற நாடுகளில் சேஷ ஜெபம் செய்துவரும் தன் பக்தர்களுக்கு அனுக்கிரகத்தையும், மன சாந்தியையும் அருளி வருகின்றார் நம் சேஷாத்ரி சுவாமிகள். நெகிழ்ந்து உருகி சேஷ பக்தர்கள் எழுதும் கடிதங்களால் இதனை உணர முடிகிறது.

வாழ்கின்ற மக்களுக்கு மட்டுமல்லாமல் இறந்தவர்களின் ஆவிகளும் பெருமளவில் அம்மாவிடம் வேண்டி சேஷனருள் வேட்டல் செய்வது சமீப காலங்களில் அதிகரித்து வருகிறது.

ஜீவித காலத்தில் சேஷாத்ரி சுவாமிகளின் சூட்சும இயக்க அனுக்கிரகத்தைத் தெரிந்துகொள்ள முடியாமல் போய்விட்டதே என வருந்தும் ஆவிகளே அதிகம்.

பெங்களூர் அம்மன் அருள் பெற்ற ஆன்மாவுக்குச் சொந்தக்காரர் ராஜகோபால் அவர்கள். இவர் பக்தர்கள் பெருக்கிய பரமசீடர். சேஷாத்ரி சுவாமிகளின் சூட்சும தரிசனத்திற்குப்பின் பெங்களூர் திரும்பும் வழியில் மரித்துப் போனார்.

இவருடைய ஆவி அம்மாவிடம் வந்து பேசியது. அந்த ஆவியின் உத்திரவின்பேரில் அவருடைய அன்புத் துணைவியான பார்வதி ராஜகோபால் அம்மையார் ஆஸ்ரமத் திருப்பணிகளை அவரைவிட ஆர்வமாக செய்து வருகிறார்.

தன் பெயர் சொல்லி ஜெபித்தல், தான் அம்மா வழி சொல்லும் மந்திர எண் கொண்டு ஜெபித்தல் போன்ற வழிகளை போதித்து வந்த மகான் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் சமீப

காலமாக தன்னுடைய கருவறையை பதினொரு முறை வலம் வரச் சொல்லி தன் பக்தர்களுக்கு உத்திரவு மொழிகிறார்.

ஓங்கார ஒலியை தன் சமாதியில் இருந்து வெளிப்படுத்திக் கொண்டே இருக்கிறேன். அந்த ஓசையில் ஒளியைக் காண ஆன்மாவை பக்குவப்படுத்தி வாருங்கள் என்று தம் பக்தர்களை அழைத்துக்கொண்டிருப்பவரும் அவர்தான்.

இந்த சேஷாத்ரி மகான் ஒருவரைப் பற்றிக்கொண்டால் போதும் பல மகான்கள் அருள் கிடைக்கும் என்ற உண்மையும் இப்போது நிரூபணமாகி வருகிறது. தன் பக்தர் ஒருவருக்கு திருமணப் பிரச்சினை. அவர் சச்சிதானந்த சுவாமிகள் குருபூஜையன்று அம்மாவை சந்திக்கிறார்.

அப்போது அம்மா மூலமாக சச்சிதானந்த சுவாமிகள் 'நானும் உனக்காக அண்ணாமலையாரிடம் உத்திரவு கேட்டுள்ளேன். அதனால் விரைவில் உனக்குத் திருமணமாகும்' என்கிறார். சேஷ பக்தருக்காக மகான் சச்சிதானந்த சாமிகளும் அருள் தேடித் தருகிறார்.

ஹோமப்பிரியா பெங்களூர் வி. சூரியநாராயணன் அவர்களின் சமீபத்திய ஆங்கிலக் கவிதை நூலின் பெயர் பிரேயர்ஸ் ஆப் தி பென். இந்த ஆங்கில நூலுக்கு மதிப்புரை வேண்டினார் மகான் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளிடம்.

ஆங்கில நூல்களுக்கு தமிழில் மகான் அணிந்துரை சொல்வார். அம்மா அதைச் சொல்லச் சொல்ல நாங்கள் எழுதி அல்லது ஒலிப்பதிவு செய்துகொள்வோம். பின் மொழி பெயர்ப்பு செய்துகொள்வோம். இது வழக்கம்.

ஆனால் வழக்கத்திற்கு மாறாக இந்த பிரேயர்ஸ் ஆப் தி பென் என்ற நூலுக்கு மகான் ஆங்கிலத்திலேயே அணிந்துரை வழங்கியருளினார். இது நமக்கெல்லாம் ஆச்சர்யம் தானே!

இப்படி தினம் தினம் மகான் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் சேஷ நாத ரூபினி உமாதேவி அம்மா வழியாக திருவிளையாடல்களை புதிது புதிதாக வகை வகையாக செய்துகொண்டே இருக்கிறார்.

அப்போதைக்கப்போது இந்த அருள் விளையாடல்கள் ஆச்சர்ய உண்மைகள், நிஜ நிகழ்வுகள் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் ஆசிரமத்தில் இருந்து வெளிவரும் 'மகான் ஸ்ரீ சேஷாத்ரி' மாத இதழில் பக்தர்களாலேயே எழுதப்பட்டு வெளிவந்து கொண்டிருக்கிறது.

## 24. சேஷ பாதை :

கலி திருத்த வந்தவரே சேஷாத்திரி சாமிகள். கலியுகத்தில் மனிதன் மந்திரங்களைக் கற்க முடியாது. உச்சரிக்க வராது. அதற்கு ஞானமும் இல்லை. வரமும் இல்லை. நேரமும் இல்லை.

**'ஓம் சத்குரு ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் திருவடிக்கே.** என்பதுதான் மூலமந்திரம். இது மகானே அருளியது'. "என்னைப் பெயர் சொல்லி அழைத்தால் போதும் நானே வருகிறேன். என்னைப் பற்றிக் கொண்டால் போதும் நானே கரை சேர்க்கிறேன்" என்பதே இதன் வெளிப்படையான பொருள். உள் அர்த்தம் உண்டு.

மத வேறுபாடுகள் இல்லாதவர் நம் மகான். சேஷாத்திரி சுவாமிகள் இப்போது இயங்கத் தேர்ந்தெடுத்து சூட்சும இயக்கம் செய்து வரும் அன்னை உமாதேவியாரும் மத வேறுபாடுகள் அற்றவர். இவர்களால்தான் இஸ்லாமியர்களும் இப்போது மலை சுற்றுகின்றனர்.

அதிகாலை மூன்று மணி முதல் நான்கு மணி வரை மூல மந்திரத்தைச் சொல்லி தியானம் செய்ய வேண்டும். முடிந்த போதெல்லாம் மூலமந்திர உச்சாடனம் பயன் தரும். மூல மந்திரம் சொன்னபடி மாதப்பிறப்பு, பௌர்ணமி, கிருத்திகை ஆகிய நாட்களில் மலை சுற்ற வேண்டும்.

**“ எங்கே போகிறோம்? ”** என்று கேட்கிறார் நம் சேஷாத்திரி மகான். இதுதான் சேஷாத்திரி சாமிகள் உலகுக்கு அருளிய அரிய தத்துவம். சேஷ தத்துவமும் இதுதான். மானுடத்தின் ஒவ்வொரு நிலையையும் எங்கே போகிறோம் என ஆராய்ந்தால் ஒரு ஆனந்த நிலை பேரானந்த நிலை அடையலாம்.

இகபர சௌபாக்கியவதி பிரம்மரிஷி ஞானத்தாய் அன்னை உமாதேவியார் திருமுன் தன்னை நாடி வருவோர்க்கு அரிய **சேஷ மந்திர எண்** கொடுக்கிறார் நம் சாமி. இது பக்தர்க்கு பக்தர் வேறுபடும். பிரச்சனைக்குப் பிரச்சனை மாறுபடும். இந்த மந்திர எண் அய்ந்து முறை உச்சரித்த பிறகே மூலமந்திரம் சொல்லவேண்டும். இதுவே ஜெபவழி.

**“ கருணா சாகரம் சாந்தம்**
**அருணா சல வாசினம்**
**ஸ்ரீசேஷாத்திரி குரும் வந்தே**
**பிரம்மே பூதம் தபோநிதம்”.**

என்னும் ‘சேஷ சுலோகம்’ இப்போது நம் சேஷாத்திரி சாமிகள் அருளி உள்ளார். இதைச் சொல்வதால் நற்பயன்கள் விரைந்து கிடைக்கும்.

சேஷாத்திரி சாமிகள் தியான மார்க்கத்தையே போதிக்கிறார். சித்தாசனம் போட்டு கண்மூடி மூலமந்திரம் சொல்லிக்கொண்டே இருந்தால் தியானத்தில் நல் நிலை உயரும் உயரும். பயிற்சி இல்லாதவர்கள்கூட புருவ மையத்தில் சேஷாத்திரி சுவாமிகள் உருவத்தை நிறுத்தி மூல மந்திரம் சொல்லி தியானித்தால் போதும்.

மக்களுக்காகக் கீழிறங்கி வந்து அவர்களுக்கு அருள் புரிவதில் நம் மகான் முன்னணியில் இருக்கிறார். வித்தியாசமான மகானும் இவர். சேஷ மந்திரம் செபிக்கிற, சேஷ சுலோகம் சொல்கிற, சேஷ கோஷமிடுகிற, சேஷ எண் உச்சரிக்கிற,

சேஷ தியானம் செய்கிற, சேஷ தத்துவம் தெளிகிற சேஷ பாதை நடக்கிற சேஷ மார்க்கம் உலகமெங்கினும் பரவி வருகிறது. அந்த சேஷ தோத்திரம் வளர்வதாக! சேஷ தோத்திரம் செழிப்பதாக.

ஓம் சத்குரு ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் திருவடிக்கே.

## 25. பணிபொழி ஆஸ்ரமம் :

திருவண்ணாமலை செங்கம் சாலையில் பூப்பூத்த நந்தவனமாய்த் திகழ்கிறது ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகளின் ஆஸ்ரமம். திருவளர்ச்சோலை என்றும் சொல்லலாம்.

அன்றாடம் பூஜை காணும் கருவறை, சுற்றுப் பிரகாரம், தாமரை பீடத்துடன் கூடிய தியான மண்டபம் ஆகியவை இந்த அதிஷ்டானத்தின் ஆன்மப் பகுதியாகும்.

மூன்று கால பூஜை தவறாது நடைபெறுகிறது. ஸ்ரீசக்ர பூஜையும் நடைபெறுகிறது. ருத்ர பாராயணம் ஒலிக்கிறது. சகஸ்ர நாம அர்ச்சனையும் உண்டு.

மகான் அவதரித்த நட்சத்திரம் ஹஸ்தம். முக்தியும் ஹஸ்தமுமே. எனவே ஒவ்வொரு ஹஸ்த நட்சத்திர நாளிலும் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமத்தில் 'ஹஸ்த பூஜை' சிறப்பாக நடைபெறுகிறது. அன்னதானம் செய்யப்படுகிறது. பக்தர்களே உபயதாரர்கள்.

ஒவ்வொரு ஹஸ்த நாளின் போதும் ஹோமம் செய்யப் படுகிறது. பக்தர்கள் வேண்டுகோளின்படி தொகை செலுத்தினால் விசேஷ, அபூர்வ ஹோமங்களும் நடைபெறுகிறது.

"இங்கே செய்கிற அன்னதானம் பாவங்களைப் போக்கும்; மோட்சத்தைக் கொடுக்கும்" என்கிறார் அம்மா வழியாக,,

சேஷாத்திரி சுவாமிகள். ஆஸ்ரமத்தின் அன்னதானம் உலகப் பிரசித்தம்.

ரூபாய் ஆயிரம் செலுத்தி அன்னதான உபயதாரராகலாம். அதன் வருவாயில் இருந்து ஆண்டுக்கு ஒரு நாள் அவர்கள் பெயரில் ஆஸ்ரமத்தில் சாதுக்களுக்கு அன்னதானம் செய்யப் படுகிறது.

எல்லோரும் பயன் பெறவும் பங்கேற்கவும் அன்னதானத் திருப்பணித் திட்டம் எளிமையாக்கப்பட்டது. ரூபாய் நூறு செலுத்தினால் அவர்கள் பெயரில் ஒரு நாள் மட்டும் அன்னதானம் செய்யப்படுகிறது.

அன்னதானம் யுகம் யுகமாய்த் தொடரும். இதன் அத்தாட்சியாக இலட்ச ரூபாய் மதிப்புள்ள அன்னதான சாலை அமைந்துள்ளது. ‘அன்னபூரணா அன்னதான சாலை’ என்பதே இதன் திருநாமம்.

ஆஸ்ரமத்தில் உள்ள சேஷ தீர்த்தம் கங்கை நீருக்கு ஒப்பானது. சாமிகளே ஏற்படுத்தித் தந்தது ஆகும். இதில் குளித்து வழிபட்டால் வரம் பெருகும்.

திறந்தவெளி தியான மேடை சேஷ பக்தர்களுக்கு வரப்பிரசாதம். அழகிய சூழலில் அமைந்துள்ளது. மலையை நோக்கி தியானிக்கும் வண்ணம் அமைந்துள்ளது. இது வேறெங்கும் நேராது.

இத் திறந்தவெளித் தியான மேடைகள் ஒன்பது அடங்கிய தொகுப்பிற்கு ‘சூக்கும தரிசனம்’ என்று சாமிகள் பெயர்ச் சூட்டி உள்ளார். குண்டலாக்கினியைக் கிளப்பி அதன்மூலம் பேரின்பம் காணுகின்ற சூக்கும நிலையை இத் தியான பீடங்களால் எளிதில் அடையலாம். தரிசிக்கலாம்.

பௌர்ணமிதோறும் மகானுக்கும் மலைக்கும் விசேஷ ஆராதனை உண்டு. அதன்பின் சேஷ பக்தர்கள் சேஷ

நாமாவளி பஜனுடன் மலை சுற்றி வருகின்றனர். இதற்காகும் செலவைப் பக்தர்களே பகிர்ந்துகொள்கின்றனர்.

இந்தப் பௌர்ணமி பூஜைக்கென மலையை நோக்கி பௌர்ணமி மண்டபம் ஒன்று அமைந்துள்ளது. இனிய மாலையின் பௌர்ணமி பூஜை ஏகாந்தத்தையும் சுத்தத்தையும் சுகந்தத்தையும் நல்கும்.

கற்பக வளாகம் என்ற பழத்தோட்டமும், அம்பாவனம் என்ற பூந்தோட்டமும் மரகதப் பச்சையில் மனங்கவரும் தெய்வீகத் தோப்பாய்த் திகழ்கின்றன.

சிவா, விஷ்ணு என்ற மான்கள் துள்ளும் மகோன்னத ஆஸ்ரமம் இது. ஆவினம் மேவும் அற்புத சேத்திரமும் இதுதான். நாகபீடம் பிரதிஷ்டை ஆகி உள்ளது.

ஸ்ரீநிவாஸ், திரிமூர்த்திபவன், சேஷ நிலையம் போன்ற குடில்கள் இங்குள்ளன. பக்தர்களின் கொடையால் மேலும் குடில்கள் சூழுகின்றன. 'வாணி மன்றம்' என்னும் திறந்தவெளி அரங்கம் பல்சுவை நிகழ்ச்சிகளின் பக்திக் கேந்திரம்.

சேஷாத்திரி சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடும் ஸ்ரீ சேஷாத்திரி வில்லிசைக் குழுவும், சேஷாஞ்சலி இன்னிசைக் குழுவும் இயங்கி வருகின்றன.

ஆண்டுதோறும் மகான் ஜனித்த ஹஸ்த நட்சத்திர நாளில் ஜெயந்தி விழாவும் மகான் முக்தி அடைந்த ஹஸ்த நட்சத்திர நாளில் ஆராதனை விழாவும் சிறப்பாக வெகு சிறப்பாக நடைபெறும்.

உலகெங்கினும் உள்ள சேஷ பக்தர்கள் ஆராதனையின் போது மிகுந்து வருவர். அன்று சேஷாத்திரி சுவாமிகளின் திருவீதி உலாவும் உண்டு.

சமரசம் உலாவும் தோட்டமான இந்த சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமத்தில் முஸ்லீம் கிருத்துவ ஜைன பக்தர்களும் வந்து வணங்கிச் செல்வது நிஜமான நடைமுறை.

மகான் சூட்சுமத்தில் அருளும் மூலிகை சிகிச்சைக்கு வசதியாக இந்த ஆஸ்ரமத்தில் மூலிகைச் செடிகள் வளர்க்கப்படுகின்றன.

மகான் தவிர மற்ற தபோதனர்களுக்காகவும் இந்த ஆஸ்ரமத்தில் வழிபாடு உண்டு.

'மகான் ஸ்ரீ சேஷாத்திரி' என்னும் திங்கள் இதழ் கடந்த 1984-ம் ஆண்டு முதல் மிகச் சிறப்பாக வந்துகொண்டிருக்கிறது. ஆண்டு சந்தா ரூபாய் பதினைந்து. ஒவ்வொரு தமிழ் மாதப் பிறப்பன்றும் இது வெளி வருகின்றது.

இந்து மதத்திற்காகவும், சேஷ மார்க்கம் உலகில் பரவ வேண்டும் என்பதற்காகவும் தொடங்கப்பட்டதுதான் 'மகான் ஸ்ரீ சேஷாத்திரி' என்ற மாத இதழ். இப்போது இது சேஷ பக்தர்களின் தொடர்பு மையமாகவும் இணைப்புப் பாலமாகவும் திகழ்கிறது. சேஷ புகழ் பாடுகிறது. பரப்புகிறது.

மாணவர்களை ஆன்மீகத்தின் வழி செழிக்கச் செய்வதற்காக ஆன்மீக மாணவர் பயிற்சி மையம் மகான் ஸ்ரீ சேஷாத்திரி ஆஸ்ரமத்தில் நடக்கிறது. ஆஸ்ரமத்தின் சார்பில் ஆங்கில, தமிழ் நூல்கள் வெளிவந்துள்ளன.

தேசமெங்கினும் உள்ள பக்தர்கள்,
திரு. ஆர். முத்துக்குமாரசாமி, பி.எஸ்ஸி.,பி.எல்.,
செயலர்,
ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் ஆஸ்ரமம்,
17, கோபால் பிள்ளையார் கோயில் தெரு,
திருவண்ணாமலை—606 601.

என்ற முகவரிக்கு நன்கொடை அனுப்பி பற்றுச் சீட்டும் பிரசாதமும் பெற்றுக்கொள்கின்றனர். ஆஸ்ரமத்தின் அன்றாட செயல்களுக்கு அது மிகவும் உதவியாயிருக்கிறது. " ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் டிரஸ்ட்" என்ற பெயரில் சேஷ பக்தர்கள் அனுப்பும் நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உள்ளது.

இவை அத்தனைக்கும் மேலாக இகபர சௌபாக்கியவதி பிரம்மரிஷி ஞானத்தாய் அன்னை உமாதேவி அம்மையார் அவர்கள் மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகளின் சூட்சும இயக்கத்திற்கு ஒத்துழைப்பு கொடுத்து மௌன விரத நாட்கள் தவிர மற்ற நாட்களில் தேடிவரும் பக்தர்களுக்குச் சலிக்காது அருள்வாக்கு சொல்லி கலி திருத்துகிறார். அவரின் ஒவ்வொரு மூச்சுக் காற்றும் இந்த ஆஸ்ரமத்தின் ஆதார சுருதியாகும்.

## 26. இதோ மகான் :

எண்பத்தி மூன்று டிசம்பர் எட்டாம் நாள் வெள்ளி மாலை அய்ந்தரை மணி அளவில் மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள் சூட்சுமத்தில் அருளி பிரம்மரிஷி, இகபர சௌபாக்கியவதி அன்னை உமாதேவி திருவாய் மொழியாகக் கிடைத்த அமுத மொழி எப்போதும் படிக்கவேண்டிய வேத மொழி இதோ.

"கலியுகம் மோசமான நிலையில் சென்று கொண்டு இருக்கிறது. தெய்வமில்லை என்று பேசுபவர்கள் பரவி தெய்வ-மில்லை என்ற நிலை வரக்கூடாது; படிப்பும், விஞ்ஞானமும் அதற்குத் துணையாகக் கூடாது என்று மகான்களாகிய நாங்கள் உணர்ந்தோம்.

மறைந்துவிட்ட மகான்கள் எல்லோரும் சூட்சும சரீரம் கொண்டு செயல்படுவதில்லை. ஆனால் எங்களில் சிலர் கொண்ட குழுவானது தெய்வீகம் காப்பாற்றப்படவேண்டும். ஜனங்கள் நல்ல நிலையினை எய்த வேண்டும் என்ற

எண்ணத்தோடு கடவுளுக்கு எங்களால் ஆன தொண்டாற்ற வந்தோம்.

மக்கள் எப்படி சமூக சேவை செய்வதில் பொது நலம் கொள்கிறார்களோ அதுபோன்றே மகான்களாகிய நாங்களும் கலியுகத்தை மாற்றவேண்டும் என்றுதான் வந்துள்ளோம்.

நான் ஏற்கனவே சூட்சும சரீரத்தில் இரண்டு பெண்கள், ஒரு ஆண் ஆகியோர் மூலமாகப் பேசியுள்ளேன். ஆனாலும் மனிதர்களைத் திருத்த முடியவில்லை. நாங்களும் விடாமல் அதற்காக முயற்சி செய்கிறோம்.

ஆனால் நான்கு அய்ந்து வருஷத்திற்கு முன்பிருந்த நிலையைவிட இப்போது இரண்டு ஆண்டுகளாக நாட்டில் பக்தி பரவி வருகிறது. நான் இந்நிலையில் தெய்வ பக்தியானது பெருகவேண்டும் என்பதற்காகக் கலியுகத்தில் என்னாலான தொண்டு செய்கிறேன்.

அதற்காக சூட்சுமத்தில் பேசுகிறேன். சூட்சுமத்தில் பேசுவதற்காக மகான்களாகிய நாங்கள் சில பிறவிகளையே தேர்ந்தெடுக்கிறோம். அவர்கள் முற்பிறவியில் தவறாது பூஜை செய்தவர்களாகவும் பிரம்மரிஷிகளுக்கு ஒப்பான சக்தி உள்ளவர்களுமாவார்கள்.

சூட்சுமம் என்பது என்ன? பேய் பிசாசு ஆவிகளைப் போன்றதா? சூட்சுமத்தில் நிகழ்த்திடும் சித்துக்களை அவைகள் நிகழ்த்திக் காட்டுமா? ஜீவாத்மா பரமாத்மா எப்படியோ அதைப் போன்றே மகான்களுக்கு ஸ்தூலமும் சூட்சுமமும் ஆகும். ஸ்தூலத்தில் அகிமா, மகிமா, பகிமா என்னும் சக்திகளைக் கொண்டு சில செயல்கள் நிகழ்த்த முடியும். ஆனால் மகான்களோ அதற்கு அப்பாற்பட்ட நிலை.

மகான்கள் கருத்தை வீணாக்காமல் நீங்களெல்லாம் பயன்படுத்திக்கொண்டு தெய்வீகத்தை வளர்க்கவேண்டும்.

இறைவனை அடையவேண்டும். இந்து மதத்தில் மட்டுமே இந்த வழியுண்டு. ஸ்தூலம்—சூட்சுமம் என்பதும் இந்து மதத்தில் மட்டுமே உண்டு.

தெய்வீகம் அழியாமல் பாதுகாக்க வேண்டும். படிப்பறிவு விஞ்ஞானம் எல்லாம் வளர்ந்துவிட்டது. ஆனால் படிப்பறிவும், விஞ்ஞானமும் தந்தவர் யார்? என்று பார்க்கவேண்டும். நம்மை இறைவனிடத்தில் அர்ப்பணமாக்குவோம்.

நான் மதத்தைப் பற்றிச் சொன்னேன். இந்து மதத்தைப் பற்றிச் சொன்னதால் பிற மதத்தைக் குறைவாகச் சொல்வதாக யாரும் நினைக்கக் கூடாது. கிருத்துவ மதமானாலும், துருக்கர் மதமானாலும் எல்லா மதமும் ஒன்றே. எல்லாம் ஒன்றுதான். எல்லா மதங்களும் ஒரே மார்க்கத்திற்கே அழைத்துச் செல்கிறது.

ஆனால் இந்து மதத்தில் மட்டுமே பிரணாயாமம், இறைவன் சொரூபம், இறைவனுடன் அய்க்கியப்படுதல், இறைவனுடன் கலத்தல், பிறவி நீக்கம் என்ற கருத்தெல்லாம் உண்டு. மறு உயிர் உண்டு என இந்து மதத்தைச் சார்ந்த சைவமும், வைணவமும்தான் சொல்லுகிறது. மறு பிறவி உண்டு என்பதால்தான் தியான மண்டபம் கட்டி அழைக்கிறோம்.

மற்ற மதத்தில் மகான்கள் இல்லையா? அவர்கள் சித்து விளையாட்டுக்கள் செய்யவில்லையா? எனக் கேட்கலாம். மற்ற மதத்திலும் சித்து விளையாடியவர்கள் உண்டு. அவர்களுக்கு ஓர் நிலை மேலுலகில் கொடுக்கப்படுகிறது. ஆனால் சில காலம்தான் அது. பின் அவர்களும் பிறப்பார்கள். இந்து மதத்தில் அப்படி இல்லை.

இந்து மதத்தில் தவம் உயர் நிலையைத் தரும். இதனையே சூட்சுமம் ஸ்தூலமாக நடத்தி வருகிறோம். தியானம் மேன்மையாக்கும். படிப்பால், தங்களால்தான் எல்லாம் ஆகிறது என்ற நிலையில் உள்ளவர்கள் தியானம் செய்ய மாட்டார்கள்.

கலியுகத்தில் தியானம் செய்ய இயலாதவர்கள் உண்டு. அவர்களுக்காகவே என்னுடைய பேரை ஜெபம் செய்யுங்கள் என்று சொல்கிறேன். இறைவனிடம் அய்க்கியப்படுதல், இறைவனிடம் கொண்டுபோதல் என இருவகையுண்டு. நாங்கள் அதற்காகவே இயங்கி வருகிறோம்.

உஷைக் காலத்தில் மனம் உடல் அந்த நிலைக்கு ஏற்றது என்பதால்தான் அவ்வாறு செய்யும்படிக் கூறி இயங்கி வருகிறோம். இந்தத் தியானத்தை எல்லா மதத்தினரும் பின்பற்ற வேண்டும்.

தியானம் செய்தவருக்கு மதம் ஜாதி கிடையாது. நான் சொல்லியபடி ஆசனத்திலிருந்து தியானம் செய்தால், என் பேரை ஜெபம் செய்தால் அந்த நாள் முழுதும் இறைவன் அருள் கிட்டும்; மனம் அமைதி அடையும்; உடல் ஆரோக்கியம் உண்டாகும். கர்மா நீங்கும்; எனவே, எல்லோரும் அப்படிச் செய்யுங்கள்.

"நாங்கள் அவ்வாறு செய்தால் இந்தப் பிறவியிலேயே இறைவனிடம் அழைத்துக்கொண்டு போய் விடுவீர்களா?" என்று கேட்காதீர்கள். நாங்கள் எப்படியும் கர்மாவை நீக்குவோம்.

இந்தப் பிறவியில் முடியவில்லையானால் அடுத்த பிறவியிலும் தொடர்வோம். இந்தப் பிறவியில் இவ்வாறு செய்ததற்கான பலனை அடுத்த பிறவியில் காண்பீர்கள். அப்போதும் எந்தவிதத்திலாவது என் பெயரை உச்சரிக்கச் செய்வேன். எப்படியும் கட்டாயம் இறைவனிடம் கொண்டு சேர்ப்போம்.

ஆகையால் அனைவரும் இந்த மார்க்கத்தில் வந்து உய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

ஓம் சத்குரு ஸ்ரீ சேஷாத்திரி சாமிகள் திருவடிகளே சரணம்!

"...இந்த நூல் அமைதியான நீரோட்டத்தைப் போல தெளிவாக உள்ளது. எளிமையாக இருக்கிறது"...



— மகான் ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகள்
அன்னை உமாதேவி திருவாய் மொழியாக

அச்சிட்டோர் : சாரதா அச்சகம், திருவண்ணாமலை.